மலர் - 3 இதழ் - 07



# தமிழணங்கு

(தமிழால் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்
ஜனவரி 2025

தனிச்சுற்றுக்கு மட்டும்

ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி

2025 அனைவருக்கும் இனிய புத்தாண்டு & பொங்கல் வாழ்த்துக்கள்



**எண்ணும் எழுத்தும்**
சம்பந்தம் ஏகாம்பரம்

**தமிழும் நானும்**
தமிழ்மகன்

**வேளாண் வழிபாடாகிய கதிரவன் வழிபாடு**
முனைவர் செ. இராஜேஸ்வரி





**பேயாழ்வார்**
ஜனக்புரி சீனிவாசன்

**நாவுக்கரசர் நவின்ற நற்சிந்தனை முத்துக்கள்**
மு. பழநிச்சாமி

**பனை தேசம்**
வி. குணசேகரன்

**சங்கத் தமிழரின் பருவ காலம் குறித்த தாவரவியல் சிந்தனைகள்**
உ.ச.ஏ.தமிழரசன்



**வைக்கம் ஜாதி ஒழிப்புப் போராட்டம்**
கவிஞர் வழக்கறிஞர் கனிமொழி



**கற்பூரம் நாறுமோ**
பேராசிரியர் முனைவர் மு முத்துவேலு

**சோழர்கால ஓவியங்கள் [8]**
மாரிராஜன்

**தமிழர் திருநாளே பொங்கல் திருநாள்..!**
இலக்குவனார் திருவள்ளுவன்



இன்னும் பல...



**எகிப்து மன்னர்களின் வழிபட்ட வேளாண் கடவுள் யார்?**




மலர்-3 ஜனவரி – 2025 இதழ்-7





தனி இதழ் ............................................ ரூ 120
அரையாண்டு சந்தா .............................. ரூ 600
ஆண்டு சந்தா......................................... ரூ 1200

Google Pay / Phone Pay மூலம் செலுத்த
+91 7010997639

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

கட்டுரைகள் அனுப்புவோர்

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com க்கு அனுப்பவும்




# உள்ளடக்கம்



இருந்தாலும் மறைந்தாலும் பேர் சொல்ல வேண்டும்;
இவர் போல யார் என்று ஊர் சொல்ல வேண்டும்.
என்ற வரிகளுக்கு ஏற்ப வாழ்ந்த
எம்.ஜி.ஆர்., பிறந்த தினம்
17.1.1917




உலகத் தமிழ்ச் சங்கத்தின் நிறுவனர் ‘எம்ஜிஆர்’

# வேளாண் வழிபாடாகிய கதிரவன் வழிபாடு



**முனைவர் செ. இராஜேஸ்வரி,**
*எழுத்தாளர், மொழிபெயர்ப்பாளர், பதிப்பாளர்.*
*தமிழக அரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதாளர்.*

கதிரவன் என்ற ஒளிப்பிழம்பை ஆதி காலம் தொட்டு மக்கள் அச்சத்தோடும் ஆனந்தத்தோடும் வணங்கி வந்தனர். கதிரவன் வழிபாடு அன்று தொட்டு இன்று வரை நடத்தப்பெறுவத்ற்குக் காரணங்கள் இரண்டு. ஒன்று இருளைக் கண்டு அச்சம் கொண்ட மனிதனுக்கு ஒளி நம்பிக்கை ஊட்டியது; இது அன்றாட நிகழ்வாகும். , இரண்டாவது மனித குலம் ஓரிடத்தில் தங்கி பயிர் செய்யத் தொடங்கியதும் வேளாண்மைக்கு கதிரொளி மிகவும் இன்றியமையாதது என்ற அறிவியல் உண்மை., இதனால் வேளாண்மை செழிக்க மழையையும் வெயிலையும் அவன் போற்றி வணங்கினான். மழைக்கடவுளாக இந்திரனையும் வெயில் கடவுளாக ஏழு குதிரை பூட்டி வரும் கதிரவனையும் வணகினான்.

**வேளாண் கடவுளான கதிரவன்**

உலகெங்கும் வேளாண்மை செழித்த நாடுகளில் கதிரவன் வழிபாடு என்பது அன்றாடக் கடமைகளில் ஒன்றாகவேவிளங்கியது. வேளாண் திருநாளான பொங்கல் திருநாள் கதிரவனுக்கு நன்றி தெரிவிக்கும் நாளாகக் கொண்டாடப்படுகிறது. சிலர் மறு நாள் கொண்டாடப்படும் மாட்டுப் பொங்கலைக் கதிரவனுக்குக் கொண்டாடப்படும் திருநாளாகக் கருதுகின்றனர்.

**ஆரியரின் சூர்ய நமஸ்காரம்**

இன்றைக்கும் சூர்ய நமஸ்காரம், சந்தியா வந்தனம் என்ற பெயர்களில் பிராமணர்களிடம் கதிரவன் வழிபாடு அன்றாடக் கடமையாக இருந்து வருகின்றது. காயத்ரி ஜபம் மற்றும் யோகப்பயிற்சியிலும் கதிரவன் வழிபாடு இடம் பெற்றுள்ளது. தமிழகக் கிராமங்களில் பெரியவர்கள் காலையில் பல் தேய்த்து முகம் கழுவியதும் காபி குடிப்பதற்கு முன்பாக சூரியனைப பார்த்து வணங்கும் மரபு காலம் காலமாக இருந்து வருகிறது.

### இன்கா இனத்தவரின் கதிரவன் வழிபாடு

*இன்கா இனத்தவர் மேட்டுப்பகுதியில் வாழ்ந்தவர்கள் ஆவர்,. அவர்களுக்கு சோளமும் தினையும் விளைய நல்ல வெயில் தேவைப்பட்டது. அவர்கள் மழையைத் தருவதும் நல்ல வெயில் தான் என்று நம்பினர் எனவே கதிரவனை தமது முழுமுதல் கடவுளாக வணங்கினர். ஆப்பிரிக்கரும் வெயிலின் மதிப்பை நன்கு உணர்ந்த வேளாண் குடிகள் என்பதால் கதிரவனை முக்கியக் கடவுளாகக் கொண்டனர். ஐரோப்பாவில் மனித உழைப்பும் வேளாண்மையும் இணைந்திருந்த காலத்தில் [தொழிற்புரட்சிக்கு முன்பு] கதிரவனைக் கடவுளாகக் கருதி வழிபட்டனர்.*



### ரோம் நாட்டில் கதிரவன்

*உரோமர்களும் கிரேக்கர்களும் தமது கடவுள் கூட்டத்தில் கதிரவனை முதன்மை கடவுளாகக் கொண்டிருந்தனர். ரோமர்கள் இலத்தின் மொழியில் sol என்று சூரியனையும் இக்னி igni] என்று நெருப்பையும் அழைத்தனர். ஆங்கிலத்தில் இச்சொல் ignite என்று மருவியது. igniயின் மருவிய வடிவமே சமஸ்கிருதத்தில் அக்னி என்று வழங்குகிறது.*

### கிரேக்கர்களின் கதிரவன்

*கிரேக்கத்தில் அப்போலோ சூரியக் கடவுளாகவும் இணைந்து இரட்டை குழந்தையாகப்பிறந்த தங்கையான அர்டேமிஸ் வெண்ணிலவாகவும்*

*வழங்கப்பட்டது. வேளாண்மைக்கு [மழைக்கு] அப்போலோவும் வேட்டைக்கு அவனது தங்கை அர்டேமிசும் தெய்வங்களாக விளங்கினர்.*

**கதிரவன் வழிபாடு நடந்த டிசமபர் 25ஆம் நாள்**

*ஐரோப்பிய நாடுகளில் கிறிஸ்தவம் பரவுவதற்கு முன்பு இருந்த நாட்டுப்புறச் சமயங்களில் கதிரவன் வழிபாட்டு விழா [Feast of unconquered Sun] ஆண்டுதோறும் டிசம்பர் 25 ஆம் நாள் கொண்டாடப்பட்டது. இதனைக் கிறிஸ்துவ சமயம் தனதாக்கிக் கொண்டு கிறிஸ்து பிறந்த தின விழாவாக மாற்றியது. இது போல புது தளிர் தோன்றும் வசந்த விழாவை ஈஸ்டர் [புது பிறப்பு விழா] என்று பெயர் மாற்றியது. உலகெங்கும் சமய விழாக்களின் பெயர் மாற்ற நடைமுறை என்பது பெரு வழக்கில் உள்ளதைக் காணலாம். அதாவது சமயம் மறைந்தாலும் மக்களின் பேராதரவு சமய விழாக்கள் இன்னொரு பெயரால் அழைக்கப்பட்டு நின்று நிலைக்கும். மக்களுக்கு சமய நடவடிக்கைகளும் செயற்பாடுகளும் முக்கியமே தவிர அவை என்ன பெயரில் வழங்கப்படுகின்றன என்பது முக்கியமல்ல. சமயம் மாறினாலும் சம்பிரதாயங்களும் மாறாது. பெயர் மட்டுமே மாற்றப்படும். இந்தியாவிலும் இவ்வாறு பவுத்தர்கள் கொண்டாடிய விழாக்களும் சமய நடைமுறைகளும் சைவ வைணவ எழுச்சிக்குப் பிறகு வைதிக சமய விழாக்களாக மாறியிருப்பதைக் காணலாம்.*

**சௌரவம் என்னும் சூர்யமதம்**

*சூரியனை வழிபடு கடவுளாகக் கொண்டு இந்தியாவில் அறுவகைச் சமயங்களில் ஒன்றான ஸௌரவம் என்ற மதம் விளங்கியது. அக்காலத்தில் சூரியனார் கோயில் என்று தனிக் கோயில்கள் கட்டப்பட்டன. பதிமூன்றாம் நுற்றாண்டுக்கு பிறகு ஸௌரவம் மறையத் தொடங்கியது அதன் பிறகு சூரியனார் கோயில்கள் சூரிய நாராயணர் கோயில்கள் என்றும் சிவன் கோயில்கள் என்றும் அழைக்கப்பட்டன. ஒரிசா கலிங்கா ராஜஸ்தான் போன்ற மாநிலங்களில் சூரியனுக்கென்று தனி கோயில்கள் கட்டப்பட்டு பின்னர் அவையும் மதம் மாற்றப்பட்டன.*

**இஸ்லாமிய நாடுகளில் கதிரவன் வழிபாடு**

*இஸ்லாமிய நாடுகளில் இஸ்லாம் பரவுவத்ற்கு முன்பிருந்த வழிபாட்டில் ஈரான் ஈராக் எகிப்து போன்ற நாடுகளில் கதிரவன் வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. ஈரானில் நெருப்பை கதிர் ஒளியை வணங்கியோர் ஜோராஸ்திரியர் எனப்பட்டனர். இவர்கள் நெருப்பை ஒளியின் வடிவமாக*

*வணங்கி வந்தனர். பின்பு இவர்கள் கட்ச் தீபகற்பம் வழியாக இந்தியாவுக்குள் வந்து பார்சிகள் என்ற பெயரில் ராஜஸ்தான், பஞ்சாப், டில்லி பகுதிகளில் தனி இனமாக வாழ்ந்தனர். கட்ச் தீபகற்பத்தில் தங்கியவர்கள் சௌராஷ்டிரர் என்று பெயர் பெற்றனர். இவர்கள் இந்து சமய நடை முறைகளை ஏற்றுக்கொண்டு தமது கடவுளின் பெயரை சூரிய நாராயணர் என்றாக்கி கொண்டனர். இந்தோ இரானியர் என்ற பேரினத்தவர் கதிரவன் வழிபாட்டுக்குப் பழகியிருந்தனர்.*

**ஆப்பிரிக்க வேளாண் கடவுளாகக் கதிரவன்**

*ஆப்பிரிக்காவில் வேளாண்மை செழித்திருந்ததால் அங்குக் கதிரவனை கடவுளாக மதித்துப் போற்றினர். கிழக்காப்பிரிக்காவில் குறிப்பாக எகிப்தில் கதிரவனை ரே [rAE] என்ற பெயரில் அழைத்தனர். காலை இளங்கதிரவனை கேபேர் [kheper] என்றும் உச்சி கதிரவனை ரே [Rae] என்றும் மாலை அந்திச் சூரியனை அந்துன் [Antun] என்றும் அழைத்தனர். வல்லூறு முகங்கொண்ட கதிரவனை அவனது தலைக்குப் பின்னால் ஒளிக்கதிர்களோடு வரைந்து வழிபட்டு வந்தனர். நைல் நதியின் கரையெங்கும் கதிரவனுக்கேன்று தனிக் கோயில்கள் அமைத்தனர். எகிப்திய நாகரிகத்தில் கதிரவன் வழிபாடு தனித்துவமானது.*

**கதிரவன் வழி வந்த மன்னர் பரம்பரை**

*பழங்காலத்தில் இருந்து அதிகாரம் மிக்க மன்னர்களைத் தெய்வ குலத்தவர் என்பதும் சூரிய குலம், சந்திர குலம் என்று பிரித்து அழைப்பதும் மரபு. கதிரவன் யாராலும் தோற்கடிக்க முடியாதவன் என்பதால் தங்களை கதிரவன் பரம்பரை என்று அழைத்துக்கொள்வதை பெருமையாக பண்டைய இன மக்கள் கருதினர். மூவேந்தர்களில் சோழர்கள் தங்களை சூரிய குலத்தவர் என்றனர். பாண்டியர் தங்களை சந்திர குலத்தவர் என்றனர். சேரர் வானவர் பரம்பரையினர் என்று அழைத்தனர்.*

*இளங்கோவடிகள் தான் இயற்றிய சிலப்பதிகாரம் என்னும் குடிமக்கள் காப்பியத்தில் இறை வாழ்த்துப பகுதியில்*

*ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்*
*காவிரி நாடன் திகிரி போற் பொற்கோட்டு*
*மேரு வலந்திரித லான்*
*என்று கதிரவனை வழிபடும் முறையைப் பின்பற்றுகிறார்.*



***எகிப்து மற்றும் ஜப்பான் மன்னர்கள்***

*எகிப்து ஜப்பான் போன்ற பழைய அரச பரம்பரை இருந்த நாடுகளில் மன்னர்கள் தம்மை சூரிய குலத்தவர் என்று பெருமையுடன் குறிப்பிட்டனர். இன்று வரை அரச பரம்பரை அறுந்து போகாமல் தொடர்ந்து வரும் ஜப்பான் நாட்டின் அரச வம்சத்தினர் தம்மை சூரிய குலத்தில் உதித்தவர என்று நம்புகின்றனர். அதனால் ஜப்பான் நாடும் சூரியன் நாடு [land of the rising sun] என்ப்படுகிறது.*

*ஜப்பானில் பவுத்தம் பரவுவதற்கு முன்பிருந்த பூர்விகச் சமயமான ஷிந்தோ சமயம் கதிரவனை அமதெரெசு [Amataresu] என்ற பெயரில் கடவுளாகக் கொண்டாடுகிறது. இந்நாட்டில் ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு பரவிய பவுத்த சமயத்தில் கதிரவனை ஜுனி தென் என்கின்றனர்.*

***கதிரவன் ஆணா? பெண்ணா?***

*இந்தியாவில் கதிரவன் ஆணாகக் கருதப்படுகிறான். ஆனால் பல நாடுகளில் பெண்ணாகக் கருதி வழிபடும் மரபு உள்ளது. இலத்தீனில் கதிரவனைப் பெண்ணாகக் குறிக்கும் Sol என்ற பெயரால் அழைக்கின்றனர். இச்சொல்லில் இருந்து 'சோலார்' என்ற ஆங்கிலச் சொல் உருவாகியது.*

கிரேக்கத்தில் அப்போலோ என்ற பெயரில் சூரியனை ஆணாகக் கருதி வணங்கினர் இருப்பினும் அங்கு *Helius* என்ற பெயரில் கதிரவனை பெண்ணாகவும் கருதும் மரபும் இருந்தது. இச்சொல்லில் இருந்து கதிரவனில் இருக்கும் வாயு ஹிலியம் வாயு என்று பெயர் பெற்றது.

சிரியாவில் அரின்னா [Arinna] என்றும் இன்கா இனத்தவர் இன்தி [Inti] மேற்கு ஆப்பிரிக்காவில் லிசா என்றும் ஈரான், பாரசீகம் மித்ராஸ் என்ற பெயரில் பெண்ணாகவும் சூரியக் கடவுள் வணங்கப்படுகிறார்.

மெசொபோட்டேமியாவில் உது என்றும் ஷாமாஷ் என்றும சூரிய தேவதை அழைக்கப்படுகிறாள். ஸ்லேவிக் இனத்தவர் ஒளி என்ற பொருளில் சூர்யாவை ஜோர்யா என்கின்றனர். ஜெர்மானியில் வாழ்ந்த பழங்குடியினர் சுனோ என்ற பெயரில் சூரியக் கடவுளை பெண்ணாகக் கருதி வழிபட்டு வந்தனர். சந்திரனை ஆணாகக் கருதினர்.

**கதிரவனின் பண்புகளும் செயற்பாடும்**

உலக நாடுகளில் வேளாண்மை பெருகிய காலத்தில் நிலவுடைமை குடும்பம் சொத்துரிமை மன்னராட்சி ஆகியவை நடைமுறைக்கு வந்த பிறகு கதிரவனை ஒளி, இசை, உண்மை, அறிவு, ஞானம், இளமை, விளையாட்டு, நீதி, அதிகாரம், அரசாங்கம் என்ற பல ஆளுமைப் பண்புகளின் சின்னமாகக் கொண்டு போற்றினர். கதிரவன் அனைத்து உலகங்களின் தலைவனாகக் கருதப்பட்டான். அவனே மேல் உலகங்கள் மற்றும் கீழ் உலகங்களின் தலைவன் ஆவான்.

**கதிரவன் உருவத் தோற்றத்தின் வளர்ச்சி**

கடவுளர் உருவங்கள் மனித குல வரலாற்றுக்கும் நாகரிகத்துக்கும ஏற்ப வளர்ச்சியும் மாற்றமும் பெறும். அவரவர் பொருளாதார சமுக உயர்வுக்கும் அறிவியல் தனமைக்கும் ஏற்ப தோற்றம் மாறிக்கொண்டே வரும். செல்வாக்கன் மக்கள் வணங்கும் கடவுளர் அவர்களின் அதிகாரம் செயல்படும் திசைகளைக் குறிக்க பொன் அணிமணிகளுடன் பல தலைகளுடன் பலப்பல கைகளுளுடன் அக்கைகளில் பல வகை ஆயுதங்களுடன் உருவமைக்கபடுவர்.

மனித குலம் தோன்றிய காலத்தில் கதிரவன் உருவம் படகில் வலம் வந் ததாக வரையப்பட்டது. பின்னர் மனித குலம் நாகரிகம் அடைந்ததும் அவன் கோயில்களிலும் ஓவியங்கள் மற்றும் காவியங்களிலும் குதிரைகள்

பூட்டிய தேரில் வலம் வரத் தொடங்கினான். இத்தகைய மாற்றங்களே இறைவன் மனிதனைப் படைக்கவில்லை. மனிதனே இறைவனைப் படைத்தான் என்ற கருத்துக்கு வழி வகுக்கிறது.

**குதிரைகளின் எண்ணிக்கை உயர்வு**

கதிரவன் நகர்வதாக நம்பப்பட்டதால் அவன் குதிரையில் வலம் வருவதாக மக்கள் உருவகப்படுத்தினர். அவரவர் செல்வாக்குக்கும் பாரம்பரியத்துக்கும் ஏற்ப குதிரைகளின் எண்ணிக்கையில் மாற்றம் இருந்தது. நோர்ஸ் பாரம்பரியத்தில் கதிரவனுடைய தேருக்கு அரவக், அட்ச்வித் என்று இரண்டு குதிரைகள் மட்டுமே உண்டு. இந்தோ ஐரோப்பிய கதைகளில் நான்கு குதிரைகள் [பிரியோஸ், ஏயியோஸ், ஏதான் ஃப்லேகொன்] காட்டப்பட்டன. பல்வேறு சமயங்களின் தாயகமான இந்தியாவில் ஒளிக்கதிரில் தெரியும் ஏழு வர்ணத்துக்குமாக ஏழு குதிரைகள் இடம் பெற்றன. கதிரவன் பகலில் பூவுலகிலும் இரவில் பூமிக்குக் கீழே உள்ள பாதாள லோகத்திலும் தன தேரில் வலம் வந்து அரசனாகத் திகழ்கிறார் என்று ஆதி காலத்தில் மக்கள் நம்பினர்.

**வேதங்களில் சூரியன்**

இந்தியப் புராணங்கள் காஷ்யப முனிவருக்கும் அதிதிக்கும் பிறந்தவ்ர் என்று கதை சொல்கின்றன.. சூரியன் ரிக் வேதத்தில் இந்திரனே சூரியனுக்கு மூத்தவன்; ஆங்கிரச முனிவரும் அவன் வம்சத்தாரும் கடும் தவம் மேற்கொண்டு சூரியனை வானத்தில் பதித்தனர் என்று ஒரு தொன்மம் ரிக் வேதத்தில் காணப்படுகிறது.

இன்னொரு இடத்தில் சூரியன் என்பவன் தந்தை சூர்யா என்பவள் அவனது மகள் என்ற குறிப்பு காணப்படுகிறது. .கதிரவன் உயரத்தில் இருந்து பூமியை பார்ப்பதால் அவன் கண்ணிலிருந்து எவரும் எதுவும் தப்ப முடியாது என்ற கருத்தில் அவன் கண்களின் நாயகன் என்றும் இறந்தவரின் கண்கள் சூரியனைச் சென்று சேரும் என்றும் சொல்லப்பட்டுள்ளது. பிற்காலத்தில் சைவ வைணவ சமயங்கள் தங்கள் கடவுளரின் கண்களில் ஒன்றை சூரியனாகவும் மற்றொன்றை சந்திரனாகவும் கொண்டனர். திருமாலை சூரிய நாராயணன் என்றே அழைத்தனர். சிவனுக்கும் முருகனுக்கும் சூரியன் வலது கண்ணாக விளங்கினான்.

சூரியனை பறவை, பருந்து என்று ரிக் வேதம் பல இடங்களில் குறிப்பிடக் காரணம் அவன் வானத்தில் உயரத்தில் சஞ்சரிக்கிறான். வான் வழியே

அவன் நகர்வதால் அவனைப் பறவையாக கருதும் போக்கும் காணப்படுகிறது. அவனுடைய கதிர்கள் கால்நடைகளாக குறிப்பிடப்பட்டுள்ளன. அவன் தனியாக சூரியனை உருவாக்கினான் என்றும் இல்லை அவன் விஷ்ணு அல்லது சோமனுடன் சேர்ந்து சூரியனை உருவாக்கினான் என்றும் சொல்கிறது. *[ரிக் X 90 ;13]* .

**சூரியனின் குடும்பம்**

சூரியனுக்கு சந்தியா, சாயா என்றும் உஷா , பிரத்யுஷா என்றும் மனைவிகள் உண்டு. சூரியனின் புதல்வர்களாக ஒரு பட்டியல் நீளுகிறது. ஸ்ராத்த தேவா, மனு, யமா, யமி, அஷ்வின், ரேவந்த், சனி, தபதி, சுக்கிரீவன் மற்றும் கர்ணன் ஆவர். சூரியனுக்கு சாவித்திரி என்றொரு மகள் இருந்தால் அவளது திருமணச் சடங்கு ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் என்பத்தைந்தாவது சூக்தமாக இடம்பெற்றுள்ளது. அது பெண் விட்டில் நடைபெறும் திருமணச் சடங்கை விவரிக்கிறது. பெண்ணை தேரிலேற்றி கணவன் வீட்டுக்கு அனுப்பும்போது ஒரு மந்திரம் சொல்லப்படுகிறது. அதைத்தான் இன்றும் பார்ப்பனர்கள் தங்கள் கலயாணங்களில் சொல்கின்றனர்.

**இந்தியாவில் சூரியனார் வழிபாடும் கோயில்களும்**

இராஜஸ்தான், குஜராத், மத்தியபிரதேசம், ஒடிஸா, பிஹார், உத்தரப் பிரதேசம், ஜார்கண்ட், போன்ற மாநிலங்களில் சூரியன் முழுமுதல் கடவுகளாக வணங்கப்பட்டான். மாதங்களில் ஆவணி மாதம் அவனுக்குரியது. அவன் சிம்ம ராசியில் வலம் வரும் ஆவணி மாதத்தில் அந்த ராசியில் ஆட்சி நாயகனாகவும் விளங்குகிறான். கிழமைகளில் ஞாயிற்றுக்கிழமை சூரியனுக்குரியதாகும். அன்றைய நாள் சூர்ய ஓரையில் தொடங்கும். ராசிக்கட்டத்தில் மேஷத்தில் அதாவது ஆண்டின் தொடக்கத்தில் சித்திரை மாதம் முழுவதும் சூரியன் உச்சத்தில் இருக்கிறான். மகர சங்கராந்தி, ரத சப்தமி, அக்ஷய திருதியை போன்றன சூரியனின் பெயரால் கொண்டாடப்படுகின்ற விழாக்கள் ஆகும்.

**பவுத்தத்தில் கதிரவன் வழிபாடு**

கிறிஸ்து பிறப்புக்கு முன்பு நான்காம் நூற்றாண்டில் இந்தியாவில் தோன்றி வளர்ந்த பவுத்த சமயம் ஏழை எளிய மக்களை தனது இலக்காகக் கொண்டு நாடு முழுக்க சமயத்தைப் பரப்பியது. அதனால் அது வரை இயற்கை

வழிபாட்டை மேற்கொண்டிருந்த வேளாண் குடிகளும் கைவினைக் குடிகளும் பவுத்த சமயத்தைப் பின்பற்றினர்.

தேவராஜனானான இந்திரனிடம் இருந்து சூர்யன் தோன்றினான் என்று ஆரிய பிராமணர்களின் ரிக் வேதமும் சொல்லியதனால் இவர்களுக்குத் தேவராஜனும் சூரியனும் சம பலம் வாய்ந்த தெய்வங்களாகத் தோன்றினர்.




**பவுத்தர்கள் தோற்றுவித்த வழிபாட்டுத் தலங்கள்**

ஆதி மனித குல வரலாற்றில் தெய்வ கருத்தியல் என்பது குறியிட்டு வடிவங்களாகக வரையப்பட்டன. உருவங்களாகவும் செய்யப்பட்டன. ஆனால் முதன் முதலில் தமது சமயத்தை நிறுவனப்படுத்தினர். அனையவரும் பின்பற்றலாம் என்று பொதுமைப்படுத்தினர். கடவுள் உருவம் கதைகள் வழிபாட்டு முறைகள் என்று முறைப்படுத்தினார். அவர்களே இந்தியாவில் மனித வடிவில் சில மாற்றங்களைச் செய்து உருவ

வணக்கத்தைத் தோற்றுவித்தனர். வழிபாட்டுத் தலங்களை உருவாக்கினர். முதலில் குகையில் மிகப் பெரிய அளவில் தெய்வ ஓவியங்களைத் தீட்டினர். பிறகு புடைப்புச் சிற்பங்களை உருவாக்கினர். அப்போது எல்லோரா குகையில் சூரியனின் தனி உருவங்கள் வரையப்பட்டுள்ளன.

**இந்திய மாநிலங்களில் கதிரவன் வழிபாடு**

பவுத்தர்கள் தேவராஜனான இந்திரனுக்கும் சூர்யனுக்கும் தனிக்கோயில்களை அமைத்தனர். ஆந்திராவில் ஸ்ரீகாகுளம் அருகே அரசவல்லி நேர ஊரில் சூரியனுக்கென்று தனி கோயில் உண்டு. கலிங்க நாட்டில் கலிங்கப்பட்டினம் என்ற கடற்கரை நகரில் சூரியனுக்கு தனிக் கோயில் உள்ளது. மெகஸ்தனிஸ் தனது பயணக்குறிப்புகளில் இக்கடற்கரை கோயில் பற்றி குறிப்பிட்டுள்ளார். ஒரிசாவில் உள்ள கோனார்க் சூரியனார் கோயில் பலருக்கும் தெரிந்த கோயில்.

இது ரத வடிவில் அமைந்த கோயில் ஆகும் இந்த ரதத்தை எழு குதிரைகள் இழுக்கின்ற வடிவில் அமைந்துள்ளது. பன்னிரெண்டு சக்கரங்கள் இந்த ரதத்துக்கு உள்ளன. ஒரிசா, கலிங்கா, கேரளா ஆகிய மாநிலங்களில் பவுத்தம் செல்வாக்குடன் திகழ்ந்த காரணத்தால் அங்கெல்லாம் சூரியனார் கோயில்கள் கட்டப்பட்டன.

தமிழகத்திலும் கேரளத்திலும் சூரியனாருக்கு பவுத்தர்கள் கோயில் எழுப்பினர். கோட்டயத்தில் இரவிமங்கலம் என்ற ஊரில் ஆதித்யபுர சிவன் என்ற சூரியனார் கோயில் உண்டு. இன்று அக்கோயில் சிவன் கோயிலாக உள்ளது. ஒரிசா, கலிங்கா, கேரளா ஆகிய மாநிலங்களில் பவுத்தம் செல்வாக்குடன் திகழ்ந்த காரணத்தால் அங்கும் சூரியனார் கோயில்கள் கட்டப்பட்டன. தமிழகத்தில் இருந்து போதி தர்மர் சீனாவுக்குப் போய் பவுத்த சமயத்தையும் தற்காப்பு கலைகளையும் அங்குப்[ பரப்பினார். அங்கிருந்து பவுத்தம் பரவிய இந்தோனேஷியா,, ஜப்பான், சீனா போன்ற நாடுகளிலும் சூரியனுக்குக் கோயில்கள் கட்டடப்பட்டன.

**ஐரோப்பாவில் கதிரவன் வழிபாடு**

பண்டைய காலத்தில் ஐரோப்பிய மக்களிடம் கதிரவன் வழிபாடு செழித்துக் காணப்பட்டது. லித்துவேநியரும் லாத்வியரும் *Saule* என்ற பெயரில் கதிரவனை வணங்கினர். ஃபின்லாந்தை சேர்ந்த ஃபின்னிஷ் இனத்தவரும் ஹங்கேரி நாட்டைச் சேர்ந்தவரும் *Beime [beams]* என்ற

பெயரில் கதிரவனை அழைத்தனர். ஆஸ்த்திரேலிய பழங்குடிகள் *bila* என்றும் *walo* என்றும் கதிரவனைக் குறிப்பிட்டனர்.



**ஒளியும் இருளும் – சமயத்தின் இரு வேறு கருத்தாக்கங்கள்**

இருட்டைக் கண்டு அஞ்சிய ஆதி கால மனிதன் கதிரவன் தோன்றியதும் தன்னை அச்சத்திலிருந்து காக்க கடவுளே தோன்றியதாக அகமகிழ்ந்தான். வேளாண்மை செழிக்க தொடங்கியதும் நிலவுடைமைத்துவம் வளரத் தொடங்கியதும் உலக நாடுகள் அனைத்திலும் கதிரவன் வழிபாடு தோன்றி வளர்ந்தது. பிற்காலத்து நிறுவனச் சமயங்களில் இறைவன் என்றால் ஒளி மிக்கவன் என்றும் சாத்தான், சனியன், பேய், பிசாசு என்றால் அது கருமையானது இருட்டானது தீய சக்தி என்றும் கருத்தியல் வளர கதிரவன் வழிபாடே மூல காரணமாக அமைந்தது.

**நிறைவு**

ஆதியில் இருட்டின் அச்சத்தை போக்க வந்த ஒளி தேவதையாக கதிரவனை வணங்கி மகிழ்ந்தனர். வேளாண்மை செழித்திருந்த காலத்தில் கதிரவனை மக்கள் மழைக்கும் வெயிலுக்கும் உரிய கடவுளாக போற்றி வணங்கினர். சூரிய வழிபாடு இயற்கை வழிபாட்டின் முக்கிய அம்சமாகத் தோன்றி பின்பு இந்து சமயம், கிறிஸ்துவம், இஸ்லாம், பவுத்தம் , ஜோராஷ்டிரியம் என்று அனைத்துச சமயங்களிலும் நீங்காத இடத்தைப் பெற்றது.

# நாவுக்கரசர் நவின்ற நற்சிந்தனை முத்துக்கள்

**மு. பழநிச்சாமி,** *நாகமலை, மதுரை – 19*
*மின்னஞ்சல் : vmps834@gmail.com*

*"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்று அதிர்ந்து முழங்கி, சைவ சமய வரலாற்றில் 'மாக்ன கார்ட்டா' (Magna Carta) படைத்தளித்த நிகரற்ற வீர மறவர்தான் நாவுக்கரசர். பட்டுடுத்தித் துயில் பூண்டு வந்தால் என்ன? வருபவன் பல்லவ வேந்தனே தான் என்றால் என்ன? சித்தத்தைச் சிவன்பாலே வைத்துவிட்ட பிறகு, பற்றற்றான் பற்றினைப் பற்றி விட்ட பிறகு, நமச்சிவாய மந்திரத்தை நாவில் நிலைநிறுத்திவிட்ட பிறகு, மண்ணாள்வோரை மதிப்போமா? துதிப்போமா? மண்டியிட்டு நிற்போமா? என்று சொன்ன சொல்லஞ்சாச் சிங்கம் தான் நாவுக்கரசர்.*

*முட்டிப் பார்த்தான் - மோதிப் பார்த்தான், தட்டிப் பார்த்தான் - துயரைத் தந்து பார்த்தான்_ பல்லவ மன்னன். நடக்கவில்லை. நாடாளும் வேந்தனின் மணிமகுடம் ஆள், அம்பு, படை, பட்டாளம் ஆகிய அனைத்தும், இந்தத் தனி மனிதர் முன்பு மண்டியிட்டுத் தாழ்ந்தது நின்றது. சார்ந்திருந்த சமண சமயத்தைத் துறந்தான் மன்னன். சைவ சமயத்தை மேற்கொண்டான். இவ்வாறு தமிழக வரலாற்றின் போக்கையே மாற்றியமைத்த மாவீரர் தான் நாவுக்கரசர்.*

*அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை அவனுக்கே தந்து மகிழ்ந்தவர் நாவுக்கரசர். என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற மந்திர வாசகத்தை மன் னுயிர் அனைத்திற்கும் சொந்தமாக்கி விட்டுச் சென்ற சீலர். தமிழோடு இசைப் பாடல் மறந்தறியாத திருத்தொண்டர் நாவுக்கரசர். வாக்கில் வாய்மையும் வாழ்வில் தூய்மையும் அன்பில் தாய்மையும் கொண்டு வாழ்ந்த தாண்டக வேந்தர் இவர்.*

*உள்ளம் குளிரக் குளிர, நா இனிக்க இனிக்க, மெய்மயிர் சிலிர்க்கச் சிலிர்க்கத் தேவாரம் பாடிய திருநாவுக்கரசரின் பாடல்களில் பயின்று வரும் சில நிகழ்வுகளை எண்ணி இன்புறலாம்.*

*முப்புரம் எரித்து முடித்த சுடுகாட்டுச் சித்தருக்கு அப்புறம் என்ன செய்வதென்று தெரியவில்லை. அடியார்களிடம் விளையாட வந்து விடுவார். அப்பரிடம் விளையாடிப் பார்ப்பதில் அந்தக் காளை மாட்டுக்காரருக்கு ஆசை அதிகம். வந்த சந்தர்ப்பத்தை விடுவாரா நாவுக்கரசர்? அந்த மாதொருபாகனிடம்*

மல்லுக்கு நிற்பார்; விளையாட்டுக் காட்டுவார்; வீரம் பேசுவார்; அன்பிலே கரைந்து கரைந்து உருகுவார்.

வந்த இறைவனைப் பிரியவிடாது எப்பொழுதும் தன்னுடனேயே வைத்துக் கொள்ள வேண்டும் என்பது அப்பரின் ஆசை. ஆனால் அவன் ஓர் இடத்தில் இருக்க மாட்டேன் என்கிறான். வருவது போல் வந்து, போவது போல்ப் போய்விடுகிறான். மூச்சோடு மூச்சாய் உள்ளே வருகிறான்; உள்ளத்தில் உறைகிறான்; கள்ளத்தோடு பிரிகிறான். பிடிக்கும் இடம் கொடுப்பதில்லை.



கொல்லிமலைத் தேனும், குடகு மலைக் கனிச்சாரும் எதிரில் பொற்கிண்ணத்தில் இருக்கிறது. அதை அப்படியே அள்ளி எடுத்து வாய் வைத்துப் பருகிவிட அப்பருக்கு ஆசை. ஆனால் கிட்டப் போனால் கிண்ணம் எட்டப் போய் விடுகிறது. அது போல் இறைவனும் வருகிறான்; இருக்கிறான்; தொட்டிழுத்துக் கட்டிப் போட முயன்றால் கண்ணாமூச்சி காட்டுகிறான்

இந்த நிலையில், நெஞ்சு பொறுக்காது, அவர் அனுபவித்த தவிப்பையும் துடிப்பையும் வேதனையையும் கீழ்க்கண்ட பாடல் மூலம் ஓவியம் போல் தீட்டிக் காட்டுகிறார்.

விள்ளத்தான் ஒன்று மாட்டேன்விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத் தேன் போல நின்னைவாய்மடுத்து உண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனும்உயிர்ப்புளே வருதி யேனும்
கள்ளத்தே நிற்றி அம்மா எங்ஙனம் காணு மாறே.

*(விருப்பம் என்னும் பற்றுள்ளதால், கிண்ணத்தில் இருக்கும் தேனை, வாய் வைத்துப் பருகுவது போல உன்னை உண்ண இயலாதபடி, நீ என் உள்ளத்தில் உள்ளே இருக்கிறாய் என்றாலும் என் மூச்சுக்காற்றினுள்ளே கலந்திருக்கிறாய் என்றாலும், கள்ளத்தனமாய் நின்று கண்களுக்குப் புலனாகாதபடி மறைந்திருக்கிறாய். ஆதலின் உன்னைக் காணும் வழி இன்னது என்று வாய்விட்டுச் சொல்லச் சிறிதும் இயலாதபடி இருக்கிறேன்.)*

*நாவுக்கரசர் நைந்து நைந்து வாழ்ந்தவர். சூலை நோயால் பட்ட துன்பம்; பாராண்டு பகடேறி வருவாரின் கோபாவேசம்; கல்லோடு கட்டிக் கடலில் விடப்பட்ட துன்பம்; நீற்றறையில் நேரிட்ட அனுபவம்; என இவ்வாறு அவர் வாழ்வில் தொடர்ந்து அடுக்கடுக்காய்த் துன்பங்கள் வந்தபோதெல்லாம், நாதன் நாமமாகிய நமச்சிவாயத்தைப் பற்றிப் பிடித்து வாழ்ந்தவர்தான் நாவுக்கரசர்.*

*சமணர்கள், நீற்றறையின் உள்ளே நிறுத்தி வைத்த பொழுது, நாவுக்கரசரின் நிலை எவ்வாறு இருந்தது? மாசில் வீணையாய், மாலை மதியமாய், வீசு தென்றலாய், இருந்தது என்னும் பொருள்பட :*

*'மாசில் வீணையும் மாலை மதியமும்*

*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*

*மூசு வண்டறை பொய்கையும் போன்றதே*

*ஈசன் எந்தை இணையடி நீழலே'*

*எனச் சொல்லோவியமாக்கிக் காட்டுகிறார்.*

*மக்களிடத்தில், அந்நாளில் குலம் கோத்திரம் முதலியவற்றின் பெயராலும், புலால் உண்டல் முதலிய செயல்களாலும், மாறுபாடுகளும் வேறுபாடுகளும் தோன்றி வளர்ந்திருந்தன. இவ் வேறுபாட்டைக் களையும் வகையில் முயன்ற நாவுக்கரசர், ' சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்' என்று வினாத் தொடுத்து 'ஏதும் ஒன்றும் அறிவிலராயினும் ஓதி ஐந்து எழுத்து உணர்வார்கட்குப் பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே மாதும் தாமும் மகிழ்வர் மாற்பேறரே' என வேற்றுமை பாராட்டாத ஒருமைப்பாட்டை உலகிற்கு உணர்த்துகிறார்.*

*சிவனடியார், ஆவுரித்துத் தின்றுழலும் புலையராயினும், அவர்களைத் தான் வணங்கும் கடவுளராக வணங்கிப் போற்றுவார். இறைவன் திருக்கோயில் இல்லாத ஊரும், திருநீறு அணியாதவரும், இறைவனைப் பத்திமையால் பாடாதவரும் வாழும் ஊர்கள் 'ஊரல்ல அடவி காடே' என்பது இவரது உட்கோளாகும்.*

இளையவர்களுக்கு இனிய கனியும், கட்டிபட்ட கரும்பும் இன்பம் தருவன. காளைப்பருவத்தாருக்கு கன்னியர் கூட்டம் இன்பம் தருவன. ஆண்மைப் பருவத்தாருக்கு அரசியல் போகம் இன்பம் தரும். இதுபோல் அவரவர் விரும்பும் இன்பங்களுக்கெல்லாம் மேலான இன்பத்தை நல்கும் இயல்பினன் இறைவன் என்னும் பொருள்பட

'கனியினும் கட்டிபட்ட கரும்பினும்

பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்

தனி முடி கவித்தாழும் அரசினும்

இனியன் தன்னடைந்தார்க்கு இடை மருதனே'

எனப் பாடி மகிழ்கிறார்..

திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள், இறைவன் இயல்பு, உயிர்களின் இயல்பு, இறைவன் உயிர்களுக்கு அருள் செய்யும் திறன், ஞானி யரும் பிறரும் இறைவனுக்கு அடியார்களாய் அன்பு செய்யும் முறை, இறைவன் அவர்கள் மனத்தில் எழுந்தருளி இன்புறுத்துவது போன்ற செய்திகளை விரித்துரைக்கின்றன. சிந்தைக்கண் சிவமாய் நின்று இன்புறுத்தும் சிவபெருமான், எங்கும் தன் இருப்பை இனிது விளக்குகிறார் என்பதை 'அங்கங்கே சிவமாகி நின்றார் தாமே' என ஓதி அறிவுறுத்துகிறார்.

நாவுக்கரசர் இறைவனை முன்னிலைப்படுத்திப் பாடிய பாடல்கள் பலப்பல. இறைவா, சாகும் நாளில், பொறி புலன்கள் நிலை கலங்கி அலமருதலால், யான் வேறு பற்றுக்கோடின்றி உன்னை எங்குற்றாய் என அழைப்பேன். அப்போது நீ வந்து இங்குற்றேன் என்று சொல்லி அருள வேண்டும் என நினைத்து,

'சாதல் நாள் நாயேன் உன்னை எங்குற்றாய் என்ற

போதால் இங்குற்றேன் என் கண்டாயே'

எனப் பாடி வேண்டுகிறார்.

எத்தகைய பிறப்பு வாய்ப்பினும் இறைவனை ஒரு பொழுதும் மறத்தல் கூடாது. ஒருவேளை புழுவாய்ப் பிறக்க நேர்ந்தாலும் நேரும். அப்பிறவியிலும் ஆண்டவனின் திருவடியை மறந்து விடக்கூடாது என்று அப்பர் வருந்துகிறார். அந்த வருத்தம் இறைவனை நோக்கிக் கேட்ட வரமாக வந்தது. 'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன் அடி என் மனத்தே வழுவாதிருக்க வரம் தரவேண்டும்' என்று கரைந்துருகிக் கசிந்து பாடுகிறார். ஒரு புழுவின் மனதிலிருந்து கூட இறைவன் திருவடி வழுவாதிருக்க வேண்டுமானால், மனித மனத்திலிருந்து அதை நழுவ விடக்கூடாது என்பதை, எத்தனை நாகரிகமாக, இங்கிதமாகக் குறிப்பிடுகிறார் நாவுக்கரசர்.

இறைவனின் அருட் செயல்களை திருவிளையாடல் என்று தான் சொல்கிறோம். திருவிளையாடல் புரியும் சிவபெருமான், ஒரு சிரிப்புக் கடவுள். சிரிப்பு கடவுள் மட்டுமல்ல; சேவடி தூக்கி ஆடும் ஆடற் கடவுளும் கூட. ஒரே துக்கமும் துயரமும் குடி கொண்டிருந்தால் அம்பலத்தில் ஏறி ஆட முடியுமா? சாம கீதங்கள் பாட முடியுமா? ஆடவும் பாடவும் வேண்டுமானால், சிரிப்பும் களிப்பும் சீரான மனோநிலையும் வேண்டும். அவன் அம்பலத்தில் ஏறி ஆடும் பொழுது அந்த அருள் முகத்தில் புன்சிரிப்பு தாண்டவமாடுகிறது. குமிண் சிரிப்புக் கூடவே குலாவி வருகிறது.

'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்'

என்கிறார் நாவுக்கரசர்.



சிவபெருமான் ஆடும்பொழுதான் சிரிப்பு என்பதில்லை; பகைவர்களைச் சாடும் பொழுதும் சிரிப்புத்தான். முப்புரங்களையும் அவர் சிரித்தே எரித்தார். இவ்வாறு திரிபுரம் எரித்த தில்லைக் கூத்தனின் சிரித்த முகத்தைக் கண்கொண்டு பார்த்து விட்டால் வேறு பார்க்க என்ன இருக்கிறது. 'தில்லைச் சிற்றம்பலவன் சிரித்த முகங்கொண்ட கண் கொண்டு மற்றினிக் காண்பது என்னே' என்று தாம் கண்ட ஞானச் சிறப்பை நம் அனைவருக்கும் காட்டுகிறார் நாவரசர்.

ஒரு சமயம் தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானை ஒன்று சிவன் மேல் பாய வந்தது. வந்த யானையைக் கொன்று, அதன் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்திக் கொண்டார். இதைக் கண்ட உமா தேவியார்

நடுநடுங்கிப் போனார். தேவியின் பயம் சிவபெருமானுக்குச் சிரிப்பை மூட்டியது. மேலும் விளையாடக் கருதி ஒரு பைரவ வேடத்தைப் போட்டுக்கொண்டு, கையிலே கொல்லும் திரிசூலத்தைத் தூக்கிக்கொண்டு, உடுக்கையை டமடமவென்று அடித்துக் கொண்டு, யானைத் தோலால் தம்மை மூடிக்கொண்டு, பூச்சாண்டி காட்டினாராம். உமா தேவியார் கோவென்று கதறிவிட்டார். அதைக் கண்டு சிவபெருமான் சிரித்தாராம். 'ஒண்திருமணி வாய் விள்ளச் சிரித்து அருள் செய்தார்' என்பது நாவுக்கரசர் காட்டும் காட்சி. அழகிய இரத்தினம் போல் சிவந்த வாயைத் திறந்து கடகடவென்று சிரித்தாராம். எவ்வளவு விளையாட்டு நிரம்பிய கடவுள் நம் கடவுள்.

ஆனால் அவர் வெறும் விளையாட்டுப் பிள்ளை என்று நினைத்து விடக்கூடாது. வேதங்களையெல்லாம் அவர் வாய் ஓதிக்கொண்டே இருக்கும். சிவபெருமானின் அம்மையப்பர் வடிவில், இடப்பாதி அம்மையின் திருவுருவம். வலப்பாதி அப்பனின் வடிவம். வலப் பக்கத்து அப்பனின் வாய், வேத கீதம் பாடுவதைக் கண்டு இடப்பக்கத்து உமா தேவியின் வாய், புன்முறுவல் பூத்து மகிழ்கிறதாம்.

'விதி விதி வேத கீத மொருபாடுமோத ஒருபாடு மெல்ல நகுமால்'

என்று நாவுக்கரசர் நயம்படக் காட்டுகிறார்.

திருமால் இராமனாக அவதாரமெடுத்து, விசுவாமித்திரரிடம் வில்வித்தை பயின்று, கால் கடுக்க நடந்து, கானகம் சென்று, மனையாளைப் பிரிந்து, குரங்குப் படைகளைத் திரட்டி. சேதுபந்தனம் செய்து, இராவணனைக் கொன்றார். ஆனால் திருத்த முடியவில்லை திருமாலால். இவ்வாறு நிகழ்ந்த திருமால் சேவகம் ஒருபுறம் இருக்க, சிவன் சேவகம் எப்படிப்பட்டது?

திருமால் தேடிச்சென்று இராவணனுடன் போரிட்டார். ஆனால் இராவணன் சிவனைத் தேடிப் போருக்கு வந்தான். அவ்வாறு வந்த இடம்தான் கயிலைமலை. கயிலை மலையை இருபது தோள்களையும் இருபது கரங்களையும் கொண்டு பெயர்த்தான்.

அப்படி வந்து மலையைத் தூக்க முயன்ற இராவணனை, சிவபெருமான் இருந்த இடம் பெயராமல், மனைவியை விட்டுப் பிரியாமல், கவலை கொண்டு வாடாமல், உதவியெதுவும் தேடாமல், ஆயுதம் கையில் தொடாமல், அவதாரம் எடுக்காமல் அம்பை வில்லில் மடுக்காமல், தமது காலின் ஒரு விரல் நுனியால், இருந்தது இருந்தபடியே ஊன்றினாராம். அவன் முற்றிலும் சிதைந்து உயிர் இழந்து விடக்கூடாது என்ற பெருங்கருணையால், கால் விரலை மெதுவாக ஊன்றினாராம். கொஞ்சம் வலிதாக அழுத்தி மிதித்திருந்தால் இராவணன் உயிரையே இழந்திருப்பான்.

சிவபெருமான் அரக்கனைத் திருத்த வேண்டும் என்று நினைத்தாரே தவிர, அழிக்க வேண்டும் என்று நினைக்கவில்லை. கொன்று விடுவது மிக எளிது. அவனை அடக்கித் திருத்தி நல்வழிப்படுத்தி அருள் நல்குவது மிகச்சிறந்த அரிய செயல். தனக்கு இன்னா செய்தாருக்கும் இனியவை செய்வது இறைமைக் குணம். ஆகவே சிவபெருமான் இராவணனுக்கு அருள் புரிந்தாராம்.



'செங்கண்மால் சிலைபிடித்துச் சேனையோடும் சேதுபந்தனம் செய்து

சென்று பொங்கு போர் பல செய்து புகலால் வென்ற பேரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ

அங்கொரு தன் திருவிரலால் இறையே ஊன்றி அடர்த்தவர்க் கே அருள் புரியும் அடிகள் இந்நாள்

வங்கமலி கடல்புடைசூழ் மாட வீதி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே'

என்பது நாவுக்கரசர் காட்டும் காட்சி. இதுபோன்ற வளமான சிந்தனைகள், அவரது உள்ளத்தில் பல காலம் தங்கிக் கருவிருந்து முத்தாக முகிழ்த்திருக்கின்றன. தோண்டச்சுரக்கும் நீர்; வேண்டச்சுரக்கும் விளைவு; கற்கச் சுரக்கும் அறிவு; கரக்கச்சுரக்கும் பால். இதுபோல் நாவுக்கரசரின் பாடல்களைப் பயிலப் பயில வெளிப்பட்டு வரும் சிந்தனை முத்துக்களை நாம் சொந்தமாக்கிக் கொள்ளலாம். எழிலூற இன்தமிழின் சுவையூறத் திகழும் இத்தகைய நாவுக்கரசரின் பதிகங்களில் படிவோம்; திளைப்போம்.

# எண்ணும் எழுத்தும்

**முனைவர். சம்பந்தம் ஏகாம்பரம்**
*கணிதத் துறைத் தலைவர் (பணி நிறைவு)*
*கொலம்பியா கல்லூரி. வான்குவர், கனடா*
*புலன் எண்: +91 82200 8160*



**முன்னுரை**

எண்ணும் எழுத்தும் கண்ணெனத்த தகும். தாய் மொழியில் சொற்களைக் காதால் கேட்டும் வாயால் பேசிப்பழகியும் கற்றுக்கொண்டோம். ஆயினும் எண் என்பதைக் கற்க வேண்டும் என்றால் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் என்ற நெறிமுறைகளைக் கற்கவேண்டும். இன்பமும் துன்பமும் போலத் தமிழ் மொழியும் கணிதமும் என்று மக்கள் இன்றும் நினைக்கின்றார்கள். இந்த நினைவை மாற்றுவதே என் நோக்கம். ஒரு சில வரிகளில் கணிதவியலைத் தொடுவேன். இரண்டு கால்களையும் கணிதத்தில் ஊன்றிக் கட்டுரையை கடினமாக்க மாட்டேன்.

**எண்**

எண் என்ற சொல்லே எண்ணையும் குறிக்கும், சிந்திக்கும் ஆற்றலையும் குறிக்கும். எண்ணிப்பார் என்றால் 1, 2, 3, … … … என்று எண்ணிப்பார் என்றும் பொருள்படும். சிந்தித்துப்பார் என்றும் பொருள் படும். வாழும் உயிர்களுக்கெல்லாம் எண்ணும் எழுத்தும் இரண்டு கண்களை போன்றது. மனிதன் பேசக் கற்றுக்கொள்வதற்கு முன்னரே எண்ணுவதற்குக் கற்றுக் கொண்டான். ஒரு மலைக் குகையில் வாழ்ந்த ஆதி மனிதன் தனது குகையில் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்ற எண்ணம் இயல்பாக வந்தது. ஒவ்வொருவருக்கும் ஒரு கல்லை அடையாளமாக வைத்திருந்தான். ஆதி மனிதன் கல்லைத்தான் பயன்படுத்தி வேட்டை யாடினான். கல்லில் குறியீடுகள் வரைந்தான். "கல்"லில் இருந்து பிறந்த சொல்லே கல்வி என்னும் கூற்று. கல்வி என்ற சொல்லுக்கும் கல்லுக்கும் இருக்கும் உறவு ஆதிமனிதனிலிருந்து ஆரம்பிக்கிறது என்பது இப்போது உங்களுக்குத் புரியும்.

முக்கோணம் எந்த வகைமையில் இருந்தாலும் மூன்று கோணங்களின் கூட்டுத் தொகை 180 பாகை அளவு. இந்த விதி இயற்கையின் அமைப்பு. அதைக் கூர்த்த மதி கொண்டு கண்டறிந்து நிரூபித்து உலகுக்கு அளிப்பதே கணிதம். எண் என்றால் கணிதம். எழுத்து என்றால் தமிழ். தமிழில் உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து, சொல் இவைகள் பொருளுடன் இயங்கிட இயல்பான முறையில் இலக்கண விதிகள் இருக்கின்றன. அது போல கணிதத்திலும் அளவிடக் கூடிய அனைத்தையும் அளவிட முடியாத

எல்லையற்றதையும் அளப்பது துல்லியமாக அளவிடும் முறைகளைக் கொடுப்பது கணிதம். இயற்கையின் கூறுகளில் உண்மைகள் இலைமறை காய் போல் பொதிந்து கிடக்கின்றன. புவிஈர்ப்பு சக்தி, காந்த சக்தி, மிதத்தல் விதி, .....என்று சொல்லிக்கொண்டே போகலாம். இறுதியாக ப் பருப்பொருளுக்கும் பரம்பொருள் என்று சொல்லப்படும் சக்திநிலைக்கும் ஒரு சமன்பாடு கண்டுபிடித்தவன் பேரறிவின் எல்லையைத் தொட்ட ஐன்ஸ்டீன் என்ற சித்தன். அவன் கண்டது இதுவே.

*e=mc^2*

அவன் நிரூபணம் செய்தது இன்று அறிவியலுக்குப் புதிய பரிமாணத்தைக் கொடுத்து விஞ்ஞானத்தின் எல்லைக்கே கொண்டு செல்கின்றது. ஆயினும், சில பித்தர்களிடத்தில் கிடைத்த கத்தி போல் அது அழிவுப்பணிக்கும் மடைமாற்றப் படுகிறது என்பது உலகமே வெட்கப்படும் செயல்.



**எழுத்து**

தமிழிலும் உயிர், மெய், உயிர்மெய், ஆயுத எழுத்து என்ற நெறிமுறைகள் தெளிவாக உண்டு. மனிதன் அ, ஆ ... ... படித்து விட்டு தமிழ் மொழியை தோற்றுவிக்கவில்லை. இயற்கையாக மலர்ந்த மொழி தமிழ். இலக்கணம்

பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாய் வழக்கில் பின்பற்றியவை. அவைகளை செம்மைப் படுத்தி இலக்கணம் எழுதப்பட்டது. எடுத்துக் காட்டாக "க" என்ற எழுத்துக்கு நான்கு "க" பிற மொழியில் உண்டு, உங்கள் தமிழில் ஏன் இல்லை என்று கேட்கிறார்கள். உயிர்மெய் எழுத்துகள் மூன்று இனங்களாக வல்லினம், மெல்லினம், இடையினம் என்று பிரிக்கப்பட்டன. "செங்கல்" என்பதில் வரும் "க" மென்மையான "க" என்று இயல்பாக மாறிவிடும். ஏனென்றால் வல்லினத்திற்கு (க) முன் மெல்லினம் (ங் ) வருகிறது. மெல்லினம் நடுவே இரண்டு பக்கத்திலும் வல்லினம் வந்தால் வல்லினம் மென்மையாகி விடும். எடுக்க காட்டு "சிந்தனை". எனவே "க"-வில் நான்கு தேவையே இல்லை. தமிழ் இயல்பாக மறுபடியும் பேச்சு மொழியாக வேண்டும். பயிற்று மொழியாகவும் தமிழகத்தில் வரும் நாள் விரைவில் வரும் என்று நம்புவோம்.



சங்ககாலப் புலவர்கள் பலர் கணிதவியல், புள்ளியியல்,வானவியல்,சோதிடம் போன்ற துறையில் வல்லமை கொண்டவர்களாக இருந்தனர். சான்றாக வள்ளுவர், கபிலர், கணியன் பூங்குன்றனார், கணக்காயனார், போதாயனர் என்போர் அனைவரும் கணிதத்துறை சார்ந்தவர்கள்.

சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் கவிஞர்கள். கணித ஆர்வலர்கள் எப்போதும் கவிஞர்கள். நான் சொல்ல வில்லை. ஜெர்மனி நாட்டின் 19-ம் நூற்றாண்டில் வாழ்ந்த மிகச் சிறந்த கணிதவியல் அறிஞர் கல்லூரிப் படிப்பிற்கு போகாமலே பல்கலைக்கழகம் அவரை அழைத்து முனைவர் பட்டம் கொடுத்தது. அவரதுபெயர் கார்ல் வெயிர்ச்ட்ராசு (Karl Weierstrass). கணிதத்தில் இவர் பெயரில் எனக்குத் தெரிந்து ஒன்பது தேற்றங்கள் இருக்கின்றன. அவரது மேற்கோள்:

*"ஒரு கணிதவல்லுநர் ஏதோ ஒரு வகையில் கவிஞராக இல்லையென்றால் அவர் முழுமையான கணித வல்லுநர் அல்ல. (A mathematician who is not also something of a poet will never be a complete mathematician).*

**தமிழ்ச் சான்றோர் சமன்பாடுகள்**

*கணித வல்லுநர் கவிஞராக இருப்பது இயல்பே. இயற்கை விதிகளை, அரிய உண்மைகளை எளிமையாகக் கூறுவதே கணிதம். கணிதம் என்பது இயற்கை விதிகள். இயல்பானவை. கண்டுபிடிப்பதற்குப் பாலிற் படுநெய்போல் மறைந் திருப்பவை. முருக வாங்கிக் கடைந்தால் தான் வெளிப்படும். அவைகளைக் கண்டறிந்து எளிமையாகக் கூறுவதே கணிதம். சில கண்டு பிடிப்பதற்கு எளிமையாக இருக்கும். காண இயலா தவைகளும் இருக்கும். ஆயினும் அவைகளைக் கண்டறிந்து நிரூபணம் செய்து எளிமையாகக் கூறுவதே கணிதம்.*

*எ. கா:*

***கணிதம்:***

*எந்த ஒரு முக்கோணத்திலும்*

*மூன்று கோணங்கள் கூட்டுத்தொகை= 180°*

***தமிழ்:***

*அல்லல் அருள்வார்க் (கு) இல்லை வளிவழங்கும்*

*மல்லன்மா ஞாலம் கரி (குறள் 245)*

*அருள் உடையவர் = துன்பம் இல்லாதவர்*

*காற்றுள்ள உலகம் = வளமுடன் வாழும்*

*எ. கா:*

***கணிதம்:***

*கணியன்: தீதும் நன்றும் பிறர் தர வாரா*

*உன் வினைப்பயன் = நன்மையும் தீமையும் .*

***தமிழ்:***

*இல்லதன் இல்லவள் மாண்பானால் உள்ளதென்*

*இல்லவள் மாணாக் கடை. (குறள் 53)*

*மாண்புடைய மனையாள் இல்லம் = வளங்கள் அனைத்தும் பொருந்திய இல்லம்.*

இல்லாள் மாண்பற்றவள் = என்ன வளம் இருந்தாலும் பயனில்லை.

போதையனார் வழிமுறை (செங்கோண முக்கோணம்)

பித்தகோரஸ் தேற்றம் முழுமையானது. ஆனால் கடினமான கணக்கு முறை. ஆயினும் போதாயினார் முறை எளியது. கணக்கிடும் முறையும் விரைவானது.

ஓடிய நீளம் தன்னை ஒரெட்டுக் கூறாக்கி

கூறிலே ஒன்றைத் தள்ளி

குன்றத்தில் பாதியைச் சேர்த்தால்

கர்ணம் தானே!

இந்த கருத்தினை விரிவாகச் சொன்னால் எளிமையாக இருக்கும்.



அச்சு யந்திரங்கள் ஏடுகள் காகிதங்கள் இல்லாத காலத்தில் சொல்லுவதைச் சுருக்கமாக சொல்வதே மரபு. எனவே எல்லோரும் சுருக்கமாக மனப்பாடம் செய்யம்படிச் சொன்னார்கள். இந்த போதையானார் வழிமுறை எளிது. உடனே கணக்கிட்டுவிடலாம். பித்தகோரஸ் என்பவர் கண்டு பிடித்த சமன்பாடும் சரியே.

ஒன்று இந்த இடத்தில சொல்ல வேண்டும். பித்தகோர்ஸ் சொன்ன சமன்பாடு மிகவும் வலிமை மிக்கது. அனைத்து செங்கோண முக்கோணத்திற்கும் பொருந்தும். ஆனால் எளிமையாகக் கணக்கிட இயலாது. சிறிது நேரம் அதிகம் தேவை. இந்த செய்தியை விவரிக்கின் கட்டுரை மேலும் விரியும்.

செம்புலப் பெயல் நீர் போல அன்புடை நெஞ்சங்கள் தாம் கலந்தனவே.

செம்மண் + நீர் = கணவன் + மனைவி

வரையறை வகுத்தார் வள்ளுவர்.

அறன் எனப் பட்டதே இல்வாழ்க்கை.

இல்வாழ்க்கை = அறம்

வள்ளுவர் என்றால் வழி சொல்பவர்கள் குறி சொல்பவர்கள் என்று இன்றும் கிராமப் புறங்களில் வழக்கு உண்டு. திருவள்ளுவரும் கணிதம் அறிந்தவரே என்றுதான் நான் சொல்வேன். அதனால் தான் கவிஞராக இயல்பாக வாழ்வியலை குறுகத் தரித்த குறளில் சொன்னார். எனவே கணிதவியல் கற்றவர் சமன்பாடு வடிக்கும்போது இயல்பாகக் கவிஞர் ஆகிவிடுகிறார். ஒன்று இரண்டு என்பது குறியீடுகள் (Notations). கீழே உள்ளவை சமன்பாடுகள் (Notions).

முதல் எழுத்து ஒன்றிவருதல் = மோனை

இரண்டாம் எழுத்து ஒன்றிவருதல் =எதுகை

அவ்வளவே. எண்களும் சமன்பாடுகளுக்கும் விதிகளை எடுத்துரைப்பதற்கு பயன்படுவதே.

**முடிவுரை:**

உலகத்துக்கே எக்காலமும் பொருந்தும் படி வாழ்வியலை மூன்றாகப் பிரித்து மனனம் செய்வதற்கு எளிதாக அருளிய உலக ஒருமைப்பாடுள்ள கவிஞர் திருவள்ளுவர். “யாதும் ஊரே யாவரும் கேளிர்” உலக ஒருமைப் பாட்டினை நான்கு சொற்களில் சொன்னவன் கணியன்.

தீதும் நன்றும் பிறர் தர வாரா என்று ஒற்றை வரியில் கர்ம யோகத்தின் கருவறையைக் காட்டியவன் கணியன். அனைத்து வாழ்வியல் கூறுகளையும் ஒருங்கே முப்பாலில் அளித்தவர் திருவள்ளுவனார். கணிதத்தில் நாட்டம் கொள்வோம். தமிழில் பயில்வோம். கவிதையில் சமன்பாடு செய்வோம்.

# சங்கத் தமிழரின் பருவ காலம் குறித்த தாவரவியல் சிந்தனைகள்


**உ.ச.எ.தமிழரசன்,**
*உதவிப் பேராசிரியர்,தமிழ்த்துறை,*
*அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி,*
*சிவகாசி.*
*மின்னஞ்சல் முகவரி: ezhiltamil91@gmail.com*
*அலைபேசி எண்: 9092249472*




*அஃறிணை உயர்கள் என்பவை பறவைகள், விலங்குகள், தாவரங்கள் ஆகும். இவை முழுவதும் இயற்கை சார்ந்தே வாழ்க்கையை வாழ்கின்றன. அவ்வகையில் அஃறிணை உயிர்களின் செயல்பாடுகளை தீர்மானிப்பவையாக பருவ காலங்கள் அமைகின்றன. விலங்குகள் இரை தேடுவது, மலர்கள் மலரும் தன்மை, பறவைகள் ஒலிக்குறிப்பு அடையாளங்கள் என அனைத்தும் பருவ காலங்கள்சார்ந்தே இயங்குகின்றன. அஃறிணை உயிர்களான தாவரங்கள் மலரும் காலத்தை உற்றுநோக்கி, இன்னின்ன பூக்கள் மலர்ந்தால் இன்னின்ன காலம் என சங்க கால மக்களின் பருவ காலங்கள் குறித்த அறிவை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.*

**கார்கால மலர்கள்**

*தலைவன் கார்காலத்தில் வருவதாய்ப் பிரிந்து சென்றான். தலைவன் வரவில்லை. இடையில் பெய்த மழையைக் கார்காலம் என்று எண்ணி பிடவம், கொன்றை போன்ற மலர்கள் மலர்ந்தன என்;று தலைவி கூறுவதாக கார்காலத்தில் மலர்ந்த மலர்களை நற்றிணை எடுத்தியம்புகிறது.*

*“கார் என்று அயர்ந்த உள்ளமொடு தேர்வுஇல*
*பிடவமும் கொன்றையும் கோடலும்*
*மடவ அகலின் மலர்ந்தன பலவே” (நற்.99: 8-10)*

**முல்லை**

*கார்காலத்தில் மலரும் மலர் முல்லை மலராகும். கார்கால மழை தொடங்கியதைத் தெரிவிக்கும் மலராய் முல்லை மலர் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது.*

*“நீஇணர்க் கொன்றை கவின்பெற காடுடன்*
*சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ*
*முல்லை இல்லமொடு மலர” (அகம்.364: 5-7)*

எல்லா மலர்களிலும் முல்லை மலர் மிகுதியாகப் பூத்திருந்த தன்மையால் கார் காலத்தில் காடு கவின்பெற இருந்தது.


முல்லை
**Botanical name: Jasminum**

"முகை முற்றினவே முல்லை முல்லையொடு

தகை முற்றினவே தண்கார்" (குறுந்.188: 1-2)

"கருவி வானங் கார் சிறந்து ஆர்ப்ப

பருவம் செய்தன பைங்கொடி முல்லை" (ஐங்.476: 1-2)

"கார் நயந்தெய்தும் முல்லை" (ஐங்.454:3)

"தண்கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை" (அகம்.144: 3)

"முல்லை நுண்முகை அவிழ்ந்த புறவு" (நற்.59: 9)

இவ்வாறாக முல்லை மலர் அரும்பும் காலம் கார்காலம் என்பதை உணர்ந்திருந்தனர்.

**கொன்றை**

கார்காலத்தில் மலரும் மலர் கொன்றை மலராகும். இக்கொன்றை மலர் உயர்ந்த மலை உச்சியில் மலர்;ந்து கார்கால வருகையை அறிவித்ததை நற்றிணை எடுத்துரைக்கிறது.

"புழற் காயக் கொன்றை கோடு அணிகொடி இணர்

ஏகல் மீமிசை மேதக மலரும்" (நற்.276: 4-5)

"காசின் அன்னபோது ஈன்கொன்றை

குரந்தொடு அலம் வரும் பெருந்தண் காலையும்

கார் அன்று அன்றி ஆயின்" (குறுந்.148: 3-5)


கொன்றை
**Fabaceae**

கொன்றை மலர் கார்காலத்தில் செறிந்த பூக்களுடன் கொத்துக் கொத்துகளாகக் கொடிப்போல் பூக்கும் என்று குறுந்தொகை எடுத்தியம்புகிறது.

"கதுப்பிற் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்

கானம் கார் எனக் கூறினும்" (குறுந்.21: 3-4)

"தவளைவாய பொலசெய் கிண்கிணிக்

காசினன்ன போதீன் கொன்றை

குருந்தோடலம் வரும் பெருந்தண் காலையும்'' *(குறுந்.148: 2-4)*

கொன்றை மலர் கார்காலத்தில் மலரும் என்று ஐங்குறுநூறும் எடுத்துரைக்கிறது.

''குறும்பல் கோதை கொன்றை மலர

நெடும்செம் புற்றம் ஈயல் பகர'' *(ஐங்.497: 1-2)*

''துணர்க் காய்க் கொன்றை குழற்பழம் ஓழ்த்தன்ன

அதிர் பெயற்கு எதிரிய சிதர்கொன் தண்மலர்'' *(ஐங்.458: 1-2)*

**பிடவம்**

கார்காலத்தில் மலரும் மற்றுமொரு மலர் பிடவமலர் ஆகும். வானத்தில் இருந்து சிதறியது மழைத்துளி. அம்மழைத்துளியால் மொட்டு விட்டது பிடவமலர். கார்கால வருகையை அறிவிப்பதாய் மலர்ந்தது. இதனை ஐங்குறுநூறு, அகநானூற்றுப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.



பிடவம்
**Randia malabarica**

''வான்பிசிர்க் கருவியின் பிடவுமுகை தகைய

கான்பிசிர் கற்ப கார் தொடங்கின்றே'' *(ஐங்.461: 1-2)*

''பிடவம் மலர தளவ நனைய

கார்கவின் கொண்ட கானம் காணின்'' *(ஐங்.499: 1-2)*

''சுரும்பு இமிர்பு ஊத பிடவுத் தளை அவிழ'' *(அகம்.304: 11)*

**பீர்க்கு**

கார்ப்பருவத்தில் புதர்களில் பீர்க்கம்பூ பூத்திருந்தது.



பீர்க்கு
**Luffa aegyptiaca**

''நீர்வார் பைம்புதல் கலித்த

மாரிப் பீரத்து அலர்சில கொண்டே'' *(குறுந்.98:4-5)*

''பொன் புனை பீரத்து அலர் செய்தன்றே'' *(ஐங்.452:5)*

**பித்திகம்**

கார்காலத்தில் மலரும் பூ பித்திகம் ஆகும். பித்திகப் பூ பிச்சிப்பூ என்றழைக்கப்படுகிறது.

"பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து
அரும்பே முன்னும் மிகச் சிவந்தனவே" (குறுந்.94: 1-2)
"மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை" (குறுந்.168: 1)

என்று கார்காலத்தில மலரும் மலராக பித்திகப் பூ உள்ளது.


பித்திகம்
Jasminum angustifolium

**தளவம்**

தளவம் என்பது செம்முல்லை மலர். இது கார்காலத்தில் மலரும தன்மையது. தோன்றி மலரும் தளவ மலரும் கார்காலத்தில் சுடர்வீசி மலர்ந்ததை ஐங்குறுநூறு எடுத்துக்காட்டுகிறது.


தளவம்,
Jasminum polyanthum

"தண்பெயல் அளித்த பொழுதின்

ஒண்சுடர்த் தோன்றியும் தளவமும் உடைத்தே"(ஐங்.440:2-3)

"கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் புரவி

நெடுங்கொடீ முல்லையொடு தளவ மலர் உதிர" (ஐங்.422:1-2)

**கூதிர்கால மலர்**


பகன்றை
Crotalaria verrucosa

கூதிர்காலத்தில் மலரக்கூடிய மலர் பகன்றை மலர் ஆகும். திங்கள் போன்று உருவம் கொண்டது பகன்றை மலர். இது வெண்ணிறக் கொடியாக ஈங்கையின் பசுமையான புதரின்மேல் அழகாக மலர்;ந்திருந்தது. கூதிர்காலத்தில் மலரும் மலராகப் பகன்றை மலர் குறிப்பிடப்பட்டிருப்பதை அறியலாம்.

"பகல்மதி உருவின் பகன்றைமா மலர்

வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்

அரும்பனி அளைஇய கூதிர்" (ஐங்.456: 2-5)

**அவரை**


அவரை
Lablab purpureus

அவரைக்கொடி பூக்கும் காலம் முன்பனிக்காலம் ஆகும்.

"கொழுகொடி அவரை பூக்கும்

அரும்பனி அற்சிரம் வாரா தோரே" (குறுந்.82: 5-6)

என்று குறுந்தொகை எடுத்துரைக்கிறது.

**குரவம் மலர்கள்**

*முன்பனிக்காலத்தின் முடிவில் மலர்ந்தன. குரவ மலர்கள் மலர்ந்து முன்பனிக்காலம் நீங்கிய செய்தியை அகநானூறு, நற்றிணைப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன.*

*"கண்பனி நிறுத்தல் எளிதோ குரவு மலர்ந்து*

*அற்சிரம் நீங்கிய அரும்பதவேனில்" (அகம்.97: 16-17)*

*"பின்பனி அமையம் வரும்என முன்பனிக்*

*கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே" (நற்.224: 2-3)*

*குரவம் மலர் மலர்ந்து விட்டால் வேனில் தொடங்கிற்று என்று கணித்துள்ளனர்.*

**கருவிளை மலர் மற்றும் பீர்க்கங்கொடி**

*முன்பனிக்காலத்தில் கருவிளை மலர்கள் கண்கள் என்று எண்ணுமாறும், பீர்க்கங்கொடிகள் பெரிய புதர்களின் மேல் பொன்போல மலரும் என்பதை,*



கருவிளை
**Clitoria ternatea**

*"கண்ணெனக் கருவிளை மலர பொன் என*

*இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்*

*அற்சிரம் மறக்குநர் அல்லர்" (ஐங்.464: 1-3)*

*எனும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் வழி அறியமுடிகிறது.*

*நிலத்தில் கதிர் ஈன்று முடிந்ததும் பனிப்பருவம் வரும் என்பதை,*

*"புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்" (அகம்.273: 4)*

*இப்பனிப்பருவக் காலத்தி;ல் பயற்றங்காய்கள் தோன்றி முதிராமல் இருக்கின்றன.*

*"பற்றுவிடு விரலின் பயறுகாய் ஊழ்ப்ப*

*அற்சிரம் நின்றன்றால் பொழுதே" (அகம்.339: 4-5)*

*விளைச்சலை உண்டாக்கும் பருவம் பனிப்பருவம் என்பதையும் பயிரினம் தழைக்கும் பருவம் பின்பனிக்காலம் இருந்துள்ளதை என்பதையும் அறிய முடிகிறது.*

*பின்பனிக்காலத்தில் கரும்பு, பகன்றை, அவரைக்கொடி, தோன்றி மலர் ஆகிய மலர்கள் மலர்ந்து மணம் பரப்பும் என்பதை அகநானூறு குறி;ப்பிடுகிறது.*

*“நீடு கழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ*

*கோடைப் பூளையின் வாடையொடு துயல்வர*

*பாசிலை பொதுளிய புதல்தோறும் பகன்றை*

*நீலஉண் பச்சை நிறம் மறைத்து அடைச்சிய*

*தோல்எறி பாண்டிலின் வாலிய மலர*

*கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ*

*ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட” (அகம்.217: 4-10)*

*என்று அகநானூறு குறிப்பிடுகிறது.*

**குரவ மலர்கள்**

*குரவ மலர்கள் மலர்வது பின்பனிப் பருவம் நீங்கக் கூடிய காலம் என்றும், வேனிலின் தொடக்கம் என்றும் அறிந்துள்ளனர். இதனை,*

*“குரவம் மலர்ந்து*

*அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்” (அகம்.97: 16-17)*

*என்று அகநானூறு குறிப்பிடுகிறது. மலரின் மலர்ச்சி, வீழ்தல் கொண்டே காலம் கணித்துள்ளதை அறிய முடிகிறது.*



குரவம்
**Tarenna asiatica**

**இளவேனிற்கால மலர்கள்**

*இளவேனிற் பருவத்தில் சிறப்பாக மலரும் தன்மையுடையது பாதிரி மலர் என்பதை,*

*“வேனில் பாதிரி கூனி மாமலர்*

*நறைவாய் வாடல் நாறும் நாள் சுரம் (அகம்.257: 1-2)*

*என்று கூறி அதன் தூய்மை போன்று மயிரெழுந்து படர்ந்த அழகொழுகும் மாமையுடையவள் தலைவி என்பதனை*

*"வேனிற் பாதிரிக் கூள் மலரன்ன*

*மயிர் ஏர்பு ஒழுகிய அம்கலும் மாமை” (குறுந்.147: 1-2)*

என்னும் பாடல் குறிக்கின்றது. அழகிய கிளைகளையுடையப் பாதிரி மலர்ந்து விட்டதாகச் சிவந்த கண்களைக் கொண்ட குயில் உலகுக்கு அறிவிக்கும் வகையில் இளவேனில் வந்தது என்பதனை

*"அவரோ வாரார் தான் வந்தன்றே*

*அம்சினைப் பாதிரி அலர்ந்தென*

*செங்கண் இருங்குயில் அறையும் பொழுதே" (ஐங்.346: 2-3)*

என்னும் ஐங்குறுநூற்று அடிகள் உணர்த்துகின்றன. தம் தொழில் திறமிக்க ஓவியரின் ஒளி பொருந்திய அரக்கினில் தோய்த்த எழுதுகோல் போன்றுள்ள தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரி மலர்ந்தன என்று பாதிரிப் பூவின் வடிவத்தினையும் அது மலரும் பருவம் இளவேனில் என்பதையும் நற்றிணை உரைக்கின்றது.



பாதிரி **(Stereospermum suaveolens)**
அல்லது
**(Bignonia suaveolens)**

*"துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி*

*வால் இதழ்அலரி வண்டுபட ஏந்தி" (நற்.118: 8-9)*

உயர்ந்த கரைகளைக் கொண்ட காட்டாற்றின் ஒளிமிக்க மணற் பரப்பைக் கொண்ட துறையிடத்தே வேனிற் காலத்தில் மலரும் தன்மையுடையதுப் பாதிரிப் பூ என்பதை

*"உயர்கரைக் கான் யாற்று அவிர் மணல் அகன்துறை*

*வேனிற் பாதிரி விரிமலர்க் குலைஇத்*

*தொடலை தைஇய மடவரல் மகளே" (ஐங்.361: 1-3)*

என்னும் பாடல் கூறுகின்றது. பாதிரி மலரோடு காட்டு மல்லிகையும் விரவி மலரக்கூடிய வேனிற் பருவம் என்பதை அகப்பாடல் அடிகள் விளக்குகின்றன.

*"கானப் பாதிரிக் கருந் தகட்டு ஒள்வீ*

*வேனில் அதிரலொடு விரைஇ காண் வர" (அகம்.261: 1-2)*

*"புகர்இல் குவளைப் போதொடு தெரி இதழ்*

*வேனில் அதிரல் வேய்ந்த நின்" (அகம்.393: 24-25)*

என்னும் அடிகள் வேனிற்கால மலர்கள் விரவி மலர்ந்த அழகு குறிப்பிடப்படுகின்றன. தலைவி தன் ஐந்து பகுப்புக்களைக் கொண்ட கூந்தலில்

வேனிற் காலத்து மலரும் பாதிரியின் மலரை அழகுறச் செருகிக் கொண்டதை அகநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகின்றது.

**முருக்க மலர்**

முருக்க மலர்கள் செறிந்த காலம் வேனிற் காலம் என்று கூறப்படுகின்றது. நெருப்பைப் போன்ற நிறம் கொண்ட முருக்க மரத்தினது மலர்கள் மலரும் இளவேனிற் பருவத்தின் தன்மையை

"பொங்கு அழல் முருக்கின் ஒண்குரல் மாந்தி

சிதர் சிதர்ந்து உகுத்த செவ்வி வேனில்' *(அகம். 277:17-18)*

என்று அகநானூறு பகர்கின்றது.

**வேம்பு**

வேம்பு இளவேனிற் பருவத்தில் மலரும் இயல்பினது. அதுவே தலைவன் வருவதாக உரைத்த காலம் என்பதை

"வேம்பின் ஒண்பூ உறைப்ப

தேம்படு கிளவி அவர் தெளிக்கும் பொழுதே" *(ஐங்.350: 2-3)*

"கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்' *(குறுந்.24:. 1)*

என்னும் பாடலடி உணர்த்துகின்றன.

குரவம் மலர்தலும், மரவம் மலர்தலும் கூட இளவேனிற் பருவ கால வருகையை அறிவித்ததை ஐங்குறுநூறு வழி அறியப்பெறுகின்றது.

"குரவம் மலர மரவம் பூப்பச்

சுரன் அணி கொண்ட கானம் காணும்

குரவநீன் சினையுறையும் பருவம்" *(ஐங்.357: 1-2)*

கோங்கும் வேங்கையும் பூக்கும் வேனிற் பருவத்தை

"பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ" *(ஐங்.369: 1)*

என்றும் மாமரம் வேனிற் காலத்தில் பூப்பது குறித்து

"தீய்ந்த மராஅது ஓங்கல் வெஞ்சினை
வேனில் ஓர்இணர் தேனொடு ஊதி" *(குறுந்.211. 4-5)*

என்றும் குறிக்கப் பெறுகின்றது.

**முதுவேனில் மலர்கள்**

உயிரினங்களும் பயிரினங்களும் வாழப் போராடும் முதுவேனிற் பருவத்தில் சிலவகை மலர்களும் மலர்வதுண்டு. இருப்பை மற்றும் முருக்க மலர்கள் வேனிற்காலத்தில் செறிந்து மலர்ந்துள்ளன. இருப்பை மலர்கள் வேனிற் காலத்தில் மலர்வன. வேனிற்காலத்தில் வீசும் கோடைக்காற்று இருப்பைப் பூவினை உதிர்த்த செய்தியினை

*'கானஇருப்பை வேனில் வெண்பூ'' (குறுந்.329: 1)*
*என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது.*
*முருக்கம்பூ வேனிற் காலத்திலும் செறிந்து மலர்ந்ததை,*
*''வேனில் முருக்கின் வினைதுணர் அன்ன'' (நற்.73: 1)*
*என்னும் அடி புலப்படுத்துகின்றது.*

காலையில் தாமரை மலரும். மாலையில் அல்லி மலரும். இருள் புலராத வைகறையில் முந்தைய நாள் மாலையில் மலர்ந்து இன்னும் தன் இதழ்விரிய நின்றதால் ஆம்பல் மலர் தாமரை மலர் போல் தோற்றம் கொள்ளும். விடிந்தும் விடியாத வைகறை வேளையைக் கன்னி விடியல் என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.



**தாமரை**
**(Nelumbo nucifera)**

*''கன்னி விடியல் கணைக்கால் ஆம்பல்*

*தாமரை போல் மலரும் ஊர'' (ஐங்.68: 1-2)*

வைகறைப் பொழுதில் மலர்கள் மலர்ந்து மணம் வீசும். அந்தப் பொழுதில் பெய்த மழை சலனமற்று இருந்தது.

வெற்றிச் சிறப்பைக் கொண்டாடும் வடுகர் இன மக்கள் வைகறைப் பொழுதில் மலரும் மல்லிகை மலரைச் சூடிக் கொண்டு முதிர்ந்த கள்ளினை பலியாகக் கொடுப்பர். இதனை

*''கொய்குழை அதிரல் வைகுபுலர் அலரி*

*சுரிஇரும்பித்தை கரும்ப படச்சூடி*

*இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை*

*நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்*

*வால் நிணப்புகவின் வடுகர் தேஎத்து'' (அகம்.213: 4-8)*

*என்று அகநானூறு குறிப்பிடுகிறது.*

வைகறையில் மலரும் மலர் நெய்தல் ஆகும். தலைவியின் கண்கள், நெய்தல் மலரைப் போன்று அழகுடையன. முதல் நாள் மாலையில் கூம்பிய நெய்தல் மலர் மறுநாள் கதிரவன் தோன்றிய பின் மலர்கின்ற தன்மை போலவே பல நாட்கள் தன் பிரிவைத் தாங்கி, தான் வந்ததும் கண்களை அகல விழித்துத் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினாள் தலைவி என்பதை ஐங்குறுநூறு புலப்படுத்துகிறது.


நெய்தல் மலர் (நீலாம்பல்)
**(Nymphaea nouchali)**

"வைகறை மலரும் நெய்தல் போல
தகை பெரிது உடைய காதலி கண்ணே" (ஐங்.188: 3-4)
வைகறைப் பொழுதில் நெய்தல் மலர் மலரும் என்பதை அறிய முடிகிறது.

**முல்லை**

மாலையில் மலரும் தன்மை கொண்ட மலராக முல்லை மலர் குறிப்பிடப் படுகின்றது. முல்லை மலர் மலரும் மாலைக்காலத்தைத் துணையோடு கலந்திருப்பவர் வரவேற்பர் என்பதை,

"சுடர்செல் வானம் சேப்ப, படர்கூர்ந்து
எல்லுறு பொழுதின், முல்லை மலரும்
மாலை என்மனார் மயங்கியோரே"(குறுந்.234: 1-3)
எனும் குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது. உள்ளிடத்தே சிறகை உடைய வண்டின் கூட்டம் மொய்க்கும் படியாக மென்புலங்களில் முல்லைக்கொடிகள் மாலைப்பொழுதில் மலர்ந்ததை,

"அஞ்சிறை வண்டின் அரியினம் மொய்ப்ப

மென்புல முல்லை மலரும் மாலை" (ஐங்.489: 1-2)

என்று ஐங்குறுநூற்று அடிகள் குறிப்பிடுகின்றன.

முல்லை பூத்தல் மாலையில் நிகழும் முல்லை பெண்கள் தம் கற்பிற்கு அடையாளமாகச் சூடும் மவராகும். முல்லை வெண்மை நிறம் உடையது. அது மாலை நேரச் சூரியனின் செம்மையான கதிர்கள் பட்டு அழகு பெற்றதை,

"பாசிலை முல்லை ஆசுஇல் வான்பூச்

செவ்வான் செவ்வி கொண்டன்று" (குறுந்.108: 3-4)

எனும் குறுந்தொகை அடிகள் உரைக்கின்றன.

மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் பொழுதினைப் பல்வேறு நிகழ்வுகளைக் கொண்டு கணித்துள்ளனர். மாலைப்பொழுதின் வருகையை முல்லை மலரைக்

கொண்டு அறிந்ததால் அது மாலையில் மலரும் இயல்புடையது என்பதை உணரமுடிகிறது.



காந்தள்
**(Gloriosa superba)**

**காந்தள்**

மாலைப்பொழுதில் பலவிடங்களிலும் காந்தள் தழைத்து மலர்ந்து நின்றதை விளக்கென ஏந்தி நின்றதாக,

"தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ" *(நற்.69: 6)*

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.

**புதல்**

காதலர் பிரிதற்கு அரிய பொழுது மாலைப் பொழுதாகும். புதல் எனும் மலர்கள் மலர்ந்து நிறைந்துக் காணப்படும் மாலைப் பொழுதில் பிரியும் தன்மையுடையவர் தலைவன் என்பதை,

“புதல் மலர் மாலையும் பிரிவோர்” *(ஐங்.215: 5)*
எனும் ஐங்குறுநூறு அடி சுட்டுகின்றது.

**பிடவம்**

கார்காலம் வந்தும், தலைவன் வரவில்லை. வண்டுகள் வாய்திறந்து, தேனுண்ணுமாறு பிடவ மலர்கள் மலரும். பிடவம் மலரும் அந்தி மாலையில் தான் காமநோய் கொள்ளுமாறு கார்ப்பருவம் மழையைப் பெய்தலால் மேகத்தைக் கடிந்து கொள்கிறாள் தலைவி,



பிடவம்
**Randia malabarica**

"வண்டு வாய் திறப்ப விண்ட பிடவம்
மாலை அந்தி மால் அதர் நண்ணிய” *(நற்.238: 3-4)*

என்று குறிப்பிடும் நற்றிணை, பிடவம் மாலையில் மலரும் தன்மை கொண்டது என்பதைப் பேசுகின்றது.

**புன்னை, தாழை**

காதல் துன்பம் பெருகி வருத்தமடையச் செய்யும் கதிரவன் காயும் மாலைப் பொழுதில் புன்னையும் தாழையும் கடற்கரை சோலையிடத்தே நிறைந்து விளங்கியதைக் கூறும்,



புன்னை
**(Calophyllum inophyllum)**

வீழ்தாழ் தாழை பூக்கமழ் கானல்

படர்வந்து தலியும் சுடர்செல் மாலை" *(நற்.78: 4-5)*

எனும் நற்றிணைப் பாடல், புன்னையும் தாழையும் மலர்ந்து மணம் வீசும் பொழுது மாலையாகும் என்பதை உரைக்கின்றது.



தாழை மலர்
(Pandanus fascicularis)

**யாமப்பொழுதின் மலர்கள்**

இயற்கை வளம் நிறைந்த பூமியானது எப்போதும் பூம்பொழில் நிறைந்த மலர்ச்சியை உடையது. பகலிலே சில மலர்கள் மலர்கின்றன. இரவில் அவை குவிந்து விட்டால் வேறு பல மலர்கள் மலர்ந்து தம் மணத்தைப் பரப்புகின்றன.

பொழுதிற்கேற்ப மலரும் தன்மை பெற்றவை மலர்கள் ஆகும். பகற்பொழுதில் வண்ணங்களைக் காணமுடியும், பன்னிற மலர்கள் பகற்பொழுதில் மலர்வன, இரவில் பெரும்பாலும் வெண்மைநிறமான மலர்கள் மலருகின்றன.

**அதிரல்**

மலைநெறியில் யாமக்காலத்தில் சில மலர்கள் யாமப்பொழுதின் தன்மைக்கேற்ப மலர்வதுண்டு. அதிரல் என்பது புனலி, மோசி மல்லிகை, காட்டு மல்லிகை என்னும் பெயர்களில் கூறப்படுகிறது.

இரவு நேரத்திலே மலர்ந்த அதிரல் மலரின் பசிய கொடியானது பதுக்கையில் நிற்கின்ற கோங்க மரத்தின் மேல் படர்ந்து நின்றதை,

"வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின்
எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்'' (அகம்.157: 5-6)
என்று உரைக்கின்றது.

கற்பின் நெறிப்பட்ட வாழ்வின் அடையாளமாக மகளிர் முல்லை மலரைச் சூடுவர், மகளிர் முல்லையை இல்லத்துத் தோட்டத்திலும் நட்டுவைப்பர். மனையின் கண் உள்ள மரத்தில் இரவில்முல்லை மலர்ந்து மணம் வீசியதை,



அதிரல்
**Derris scandens**

"இனைமதி வாழியர் நெஞ்சே, மனைமரத்து
எல்லுறும் மௌவல் நாறும்'' (குறுந்.19: 3-4)
என்று குறுந்தொகை அடிகள் விளக்குகிறது.

**முசுண்டை**

முசுண்டைச் செடி யாமத்து இருளில் மலரும் தன்மையுடையது. குவிந்த இலையையுடைய முகண்டையின் மலர்கள் நள்ளிரவின் இருளிலே வானத்தில் மீன் பூத்தாற்போல் மலர்ந்ததை,

*"குவையிலை முகண்டை வெண்பூக் குழைய*
*வானெனப் பூத்த பானாட் கங்குல்" (அகம்.94: 2-3)*
*எனும் அடிகள் உணர்த்துகின்றன.*

**கரிய மலர்**

ஊரினர் யாவரும் உறங்கும் மழைத்துளிகள் பெய்யும் நடுயாமத்தில் மலரும் மலராகக் கரிய மலர் விளங்கியதை

*"தண்புனக் கருவினைக்களபோல் மாமலர்*
*ஆடுமயிற் பீலியின் வாடையொடு துயில்வர*
*உறை மயக்குற்ற வளர்துஞ்சு யாமத்து" (நற்.262: 1-3)*
*என நற்றிணை எடுத்துரைக்கிறது.*

**முடிவுரை**

சங்க இலக்கியம் காட்டும் பொழுது குறித்த இடமும் சூழலும், மாந்தர்களின் அகவாழ்வைக் காட்டுவதோடு இயற்கையுடன் ஒன்றி அமைவதாய் உள்ளதை எடுத்துரைக்கின்றது. பருவப் புனைவுகளும் வாழ்வியல் கூறுகளும் இயைந்தே காட்டப்படுகின்றன.

மலை, காடு, கடல் இவற்றால் ஆன நிலக்கூறுகள், ஒருநாளின் காலக்கூறுகளுக்கு உடன்பட்டு அதன்வழி மாந்தர்களின் வாழ்வியல் கூறுகள் பொழுது சார்ந்து உண்டாகின என்பதை அறிய முடிகிறது.அஃறிணை உயிர்களான தாவரங்களின் மலர்கள் மலரும் தன்மை பொழுது சார்ந்தே இயங்குவதையும் அதன் வழி சங்க கால மக்கள் காலம் சார் சிந்தனையை அறிந்திருந்தனர் என்பதையும் இக்கட்டுரையின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**துணை நின்ற நூல்கள்:**

*1. சங்க இலக்கியம் முழுவதும்*
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*முதற் பதிப்பு,*
*சென்னை.*
*2004*

# தமிழும் நானும்

**தமிழ்மகன்,**
*எழுத்தாளர், பதிப்பாளர்.*



*1.*

*சினிமா பத்திரிகையாளர், அறிவியல் புனைகதை எழுத்தாளர், நாவலாசிரியர், சிறுகதாசிரியர் என பன்முகத்துடன் தொடர்ந்து எழுதி வருகிறீர்கள். தனிப்பட்ட வகையில் உங்களை அதிகம் ஈர்க்கும் பகுதி எது?*

எனக்குத் தெரிந்த எல்லா வகைப்பாடுகளிலும் என் படைப்புகளை வெளிப்படுத்த முயற்சி செய்கிறேன். சினிமா, அறிவியல், வரலாறு எல்லாவற்றிலும் நான் சமூகத்தையே பிரதிபலிக்க விரும்புகிறேன். தமிழகத்தின் அரசியல் போக்குகள், ஈழப் போராட்டம், தமிழின் தொன்மை, பகுத்தறிவு செயல்பாடுகள் என்பனவற்றையே மையப்படுத்துகிறேன். நான் அறிந்துகொண்ட ஒன்றை மக்களுக்குக் கடத்துவதற்கு நீங்கள் சொல்லும் பன்முகத்தையே ஊடகமாகப் பயன்படுத்துகிறேன். ஒருவருக்கு தெரியப்படுத்துகிற எதுவும் பிரசாரம் என்றால் என் நாவல்கள் அனைத்தும் அப்பட்டமான பிரசாரங்கள். மேலும், எதையும் தெரியப்படுத்தாமல் இருப்பதற்காக எதற்கு எழுத வேண்டும்?

*2.*

*இரண்டு கவிதை நூல்கள், ஐந்து சிறுகதை தொகுதி, பத்துக்கும் மேற்பட்ட நாவல்கள், அறிவியல் கட்டுரை தொகுப்பு, சினிமா தொடர்பான ஐந்துக்கும் மேற்பட்ட நூல்கள். எப்படி எழுத்தில் உங்களால் தொடர்ந்து இயங்க முடிகிறது? அந்த மனநிலை எப்படி வாய்க்கிறது. ?.*

ஒருமுறை நடிகர் ஜெமினி கணேசன் அவர்களுடன் பேசிக்கொண்டு இருந்தபோது, எப்போது ஒருவனால் உடலுறவு கொள்ள முடியவில்லையோ அப்போது அவன் இறந்துபோக தயாராகிவிட்டான் என்று அர்த்தம் என்றார். காதல் மன்னனுக்கு அது. எனக்கு எழுத்து.

*3.*

*ஆகச்சிறந்த படைப்பாகக் கொண்டாடப்படுவது திராவிட இயக்க பின்னணியில் எழுத்தப்பட்ட 'வெட்டுப்புலி' நாவல்" நாவலாக இந்த களத்தை எழுத உந்தியது எது? அந்த அனுபவத்தை பகிர்ந்து கொள்ளவும்?*

என்னுடைய குடும்பத்தில் பலரும் வெட்டுப்புலி தீப்பெட்டியில் இருப்பவர் உன்னுடைய தாத்தா தான் என்று சொல்லி வளர்த்தார்கள். சிறுவயதில் அது ஒரு சாதாரண விஷயமாக இருந்தது. அதற்கு பல ஆதாரங்களும் கிடைத்த பிறகு அதே நண்பர்களிடம் பகிர்ந்து கொண்டேன்.

கவிஞர் கடற்கரய் அவர்கள் இது ஒரு நாவலுக்கான விஷயம். நீங்கள் எழுதலாம் என்று சொன்னார். அதை நாவலாக்குவதற்கு இருபதாம் நூற்றாண்டின் சமூக கூறுகளை இணைத்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. 20 ஆம் நூற்றாண்டில் சினிமா, அரசியல் இரண்டும் சேர பலரும் போற்றும் படியாக அமைந்தது.




*4.*

எழுதி நாம் வாழ முடியும் என்ற எண்ணத்தை உங்களுக்குள் விதையாக விழுந்த நிகழ்வு எது? அறியா வயதில் விழுந்த விதை. 40 ஆண்டுகளுக்கு முன்பு விழுந்த விதை இப்போதுதான் முளைக்கிறது. எழுத்தின் அறுவடையை அனுபவிக்க 40 ஆண்டுகள் ஆகிவிட்டன.

*5.*

*உங்களின் பத்திரிகையாளர் வாழ்வு எங்கிருந்து தொடங்கியது? முழு நேர பத்திரிகையாளராக எப்பொழுதிலிருந்து தொடங்கினீர்கள்?*

*இதற்கு முன்னர் கேட்ட கேள்விக்கான பதில் இங்கே தொடர்கிறது. எழுதி வாழ்ந்துவிட முடியும் என்ற மிகுந்த கனவுகளோடு திருமணம் ஆகியும் ஐந்து ஆண்டுகள் எந்த வேலைக்கும் போகாமல் இருந்தேன். குழந்தையும் பிறந்து விட்ட பின் சமாளிக்க முடியாமல் தவித்தேன். குழந்தைகளைக் கரையேற்றும் வரை எழுத்தை அடைகாக்க முடிவு செய்தேன். கவிஞர் கவிதா பாரதி அவர்கள் அப்போது போலீஸ் செய்தி பத்திரிகையிலே வேலை பார்த்து வந்தார். அந்த வேலையில் இருந்து விலகி விட அவர் முடிவு எடுத்தபோது, அவருக்கு அங்கே விதிக்கப்பட்ட ஒரே ஒரு நிபந்தனை... வேறு ஒரு எழுத்தாளரை இங்கே வேலைக்கு அமர்த்திவிட்டு செல்ல வேண்டும் என்பதுதான். அந்த நெருக்கடியான நேரத்தில் அவருக்கு உடனே சிக்கியவன் நான். என்னை அங்கே பணயம் வைத்துவிட்டு அவர் விலகிக் கொண்டார். ஒரு 35 ஆண்டுகள் பத்திரிகையாளராகத் தொடர்ந்தேன். எனக்கு இரண்டு குழந்தைகள். அவர்களை நல்லபடியாக வளர்த்தேன். மகளுக்கு முதலில் திருமணம் நடந்தது. அடுத்து மகனுக்குத் திருமணம். 2019, டிசம்பர் 2-ம் தேதி திருமணம் நடந்தது. டிசம்பர் 3-ம் தேதி வேலையிலிருந்து விலகிக் கொண்டேன்.*

*6. ``கவிதை மென்மையான பூகம்பம்; அது படிக்கும்போதே வெடிக்கும்" இந்த வரிக்கு சொந்தக்காரர் நீங்கள். இப்படி எழுதுவது சரியென நினைக்கிறீர்களா?*

*என்னுடைய 17 வயதில் எழுதிய கவிதை. இருப்பினும் அதில் தவறு எதுவும் இருப்பதாக தெரியவில்லை.*

*7. மாநிலக்கல்லூரியில் பி.எஸ்ஸி பிஸிக்ஸ் படித்துக் கொண்டிருந்த நீங்கள் தமிழ் மேல் பேரார்வம் ஏற்படக் காரணமாக இருந்தவர்கள் யாரேனும் இருக்கிறார்களா? என் தந்தை பச்சையப்பன் கல்லூரியில் மு. வரதராசனார் அவர்களின் மாணவர். நான் மாநில கல்லூரி கவிஞர் மு . மேத்தா அவர்களின் மாணவன். இந்த அழகிய ஒற்றுமையே என்னை எழுத்தாளன் ஆக்கியது.*

*9.*

*திராவிட இயக்க வரலாற்றோடு, சென்னை,செங்கல்பட்டு, திருவள்ளூர் மூன்று மாவட்டங்களையும் பதிவு செய்த முதல் நாவல் என்ற பெருமையை "வெட்டுப்புலி" பெறுகிறது. மூன்றின் நிலமும் ஒன்று போல் இருப்பதினால் எழுதுவதில் எம்மாதிரியான நெருக்கடி இருந்தது? மூன்று மாவட்டங்களாக இப்போது அறிவிப்பு இருந்தாலும் அவை உணவு உடை பேச்சு வழக்கு போன்றவற்றில் ஒன்றாக இருந்த ஒரே மாவட்டம். சென்னையின் படு வேகமான வளர்ச்சியை உண்மை தன்மையோடு பதிவு செய்வது மட்டுமே எனக்கு இருந்த சவால்.*

*10.*

*ஆற்றின் கரையில் இருக்கும் உங்கள் "ஜெகநாதபுரம்" கிராமத்தில்தான் 'வெட்டுப்புலி'நாவல் ஆரம்பிக்கும். அதனை விவரிக்கும் போது ஏற்கனவே திட்டமிடுதல் இருந்ததா? நாம் எதை நோக்கி நகர்த்துகிறோம் என்று?*
என்னுடைய எல்லா கதைகளிலுமே கிட்டத்தட்ட ஜெகநாதபுரம் இடம்பெற்று விடும். அந்த கிராமம்தான் ஒரு சிறுவனை இளைஞன் வரை வளர்த்தெடுத்தது. அங்கிருக்கிற ஆறு, மரங்கள் அனைத்துமே என் கதைகளில் பாத்திரங்கள். மனிதர்கள் அனைவருமே என்னுடைய கதைகளின் ஏதோ ஓரிடத்தில் இடம் பெற்றுவிடுவார்கள். இப்போது வெளியிட்டுள்ள ஞாலம் நாவல் வரை.




*11.*

*வண்ணதாசன், கலாப்ரியா, பிரபஞ்சன்,எஸ். ராமகிருஷ்ணன், போன்ற எழுத்தாளர்களால் நல்ல படைப்பு எனக் குறிப்பிட்டிருக்கிறார்கள். கொண்டாடினார்கள். இருந்த போதிலும் இது எட்ட வேண்டிய இடத்தை எட்டவில்லை என்று நினைக்கிறீர்களா?*

ஆமாம்.

*12. திராவிட இயக்கத்தைப் பற்றி தமிழில் வந்த முதல் நாவல் இதுதான். நேர்மையாக அந்த இயக்கத்தை பதிவு செய்திருக்கிறார். வெறுமனே துதி பாடலாக இல்லாமல் ஏகப்பட்ட விமர்சனங்களையும் உள்ளடக்கிய, இந்த இயக்கத்தின் தேவை என்ன? என்ன நோக்கத்துக்காக இந்த இயக்கம்*

ஆரம்பிக்கப்பட்டது? எப்படி அது இயங்கிக்கொண்டிருக்கிறது? அது எப்படியாக மாற வேண்டிய தேவை உள்ளது என நாவல் பேசுவதாக ஆய்வாளர் தொ. பரமசிவன் பேசியது பற்றி உங்கள் கருத்து? திருநெல்வேலியில் மயன் ரமேஷ் நடத்தி வந்த பண்பாட்டு மையத்தின் சார்பில் அந்தக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. திருநெல்வேலி இருந்த நூலகம் ஒன்றில். `திராவிட இயக்கத்தை மையப்படுத்தி தமிழில் எழுதப்பட்ட முதல் நாவல்' என்று தொ. ப. அழுத்தம் திருத்தமாக பதிவு செய்தார். அவர் வாழ்த்தியது எனக்கு பெருமையாக இருந்தது.

*13.*




உங்களுக்கு முன் திராவிட இயக்கம் பற்றி இலக்கியப் பதிவு யாராவது தங்களது கதையில் பதிவு செய்துள்ளார்களா? சொல்லிக் கொள்ளும் அளவுக்கு அந்த இயக்கத்தின் பதிவுகள் கதைகளில் வரவில்லை. சிலர் ஓரிரு வரிகளில் கடந்து சென்றிருக்கிறார்கள்.

*14.*

*"தமிழில் உங்களுக்குப் பிடித்த எழுத்தாளர் யார்?" உங்களைஅதிகமாய்ப் பாதித்த எழுத்தாளர் யார்?*

பலரும் அவர்களின் ஏதோ ஒரு படைப்பின் மூலம் என்னை பாதித்திருக்கிறார்கள். சங்க காலம் தொட்டு இன்றைய காலம் வரை. புதுமைப்பித்தன், தி. ஜானகிராமன், சுஜாதா போன்ற பலர் ஆச்சரியப்படுத்தியவர்கள்.

# பனை தேசம்

**வி. குணசேகரன்**
வேளாண் துறை அதிகாரி, தமிழ்நாடு



***பனை***

*கூந்தலையும் முடியாத*

*நீ தானோ,*

*நுங்கு தந்தாய்,!*

*பனம் பழம் தந்தாய்.!*

*அதனடுத்து சிம்பு தந்தாய்.!*

*திங்கள் விட்டு கிழங்கு தந்தாய்..!*

*அதுமட்டுமா....*

*கருப்பட்டி,*

*கற்கண்டு ,*

*பதனீர்,*

*கள் ,*

*சேவாக்காய்,*

*இவ்வளவுடன்  வீடு மேய ஓலை தந்து,*

*விசிறியானாய்,..!*

*விளையாட்டுப்பாெருளானாய்...*

*அப்பப்பா.!!!*

*என்னென்ன பயன் தந்தாய் போ!!!*

*யார் நீ ?*

*ஏழைகளின் கற்பக விருட்சமோ!...*

*உயிர்  கொடுத்த ஆசானோ!!....*

*என் தாயினும் மேலானவளோ.!!!*

*-நம்மாழ்வார்,*

*தமிழக அரசின் மரம் (State Tree of Tamil Nadu), எட்டு நூறுக்கும் அதிகமான பயன்கள், கிராமத்து மக்களுக்கு வேலை வாய்ப்பு, ஓலையிலிருந்து கலைப் பொருட்கள், கோடை வெப்பத்தினை தனிக்கும் நுங்கு மற்றும் பனங்கிழங்கு போன்ற உணவுப் பொருட்கள், மிகக் குறைவான மழை பெய்யும் இடங்களிலும் வளரும் தன்மை, மண்வளத்தினை பாதுகாக்கும், தரிசுநிலங்களிலும் வளரும் இயல்பு மற்றும் எண்ணற்ற சிறப்பம்சங்களைக் கொண்டது பனை மரம் .*



**குடும்பத்தில் ஆறு வகைகள்**

*ஆப்பிரிக்கா, ஆசிய நாடுகளைத் தாயகமாகக் கொண்ட பனைக் உள்ளன. 30 மீட்டர் வரை உயரமும், வடிவில் 2-3 மீட்டர் நீளம் கொண்ட இலைகளும் கொண்டவை.*

*மன்னர்கள் காலத்தில் ஒரு ஊரின் எல்லையினை குறிக்க மரங்கள் நடப்பட்டது. பனங்காடி, பனைக்குடி, பனைகுளம், பனையூர் , பனைமரத்துப்பட்டி, போன்ற பெயர்கள் இன்றளவும் பனை மரத்தின் பெருமையினை நமக்கு சொல்கின்றன.*

*இந்தியாவில் உள்ள 8 கோடி பனை மரங்களில் 5 கோடிக்கும் அதிகமான பனை மரங்கள் தமிழகத்தில் இருப்பதாக கணக்கிடப்பட்டுள்ளது. தூத்துக்குடி, திருநெல்வேலி, இராமநாதபுரம், திண்டுக்கல், சேலம், தருமபுரி, வேலூார் மற்றும் செங்கல்பட்டு மாவட்டங்களில் வேல மரத்திற்கு அடுத்தாக அதிகமான மரங்கள் உள்ளது. பனை மரம் நன்கு வளர குறைந்த பட்சம் ஆண்டிற்கு 750 மிமி மழை அளவு போதுமானது. நடவு செய்த 15 ஆண்டுகளில பலனுக்கு வரும்.*

நமக்கு அருகாமையில் உள்ள இலங்கையில் ஆங்கிலேயர் காலத்தில் பனைமர பெருந்தோட்டங்கள் *(Palmyra Estates)* இருந்ததாகவும் அதில் நூற்றுக்கணக்கான பணியாளர்கள் பணிபுரிந்ததாகவும் பனை மரம் கொண்டு ஏற்றுமதி மரம் பனஞ்சர்க்கரை ஆகியவற்றை ஏற்றுமதி செய்ததாகவும் குறிப்புகள் உள்ளன.

பனை மரமே காய்ந்தால் வேறு எந்த மரமும் வளராது. வறட்சியிலும் நிலத்திற்கு பசுமை சேர்ப்பது பனையே.

பனை மரங்கள் கருமேகத்தினை குளிர்விக்கும் சக்தி கொண்டது எனவே தான் மன்னர்கள் காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் பனந்தோப்பு உருவாக்கப்பட்டது. பனையின் பசுமை காற்றினை குளிர்விப்பதாக பழங்கால மக்கள் கருதியதால் பனந்தோப்புக்களை காற்று வரும் திசையினை நோக்கி அமைத்தார்கள். இன்று பனந்தோப்புகள் குறைந்து கொண்டே போகின்றன. மழையும் குறைந்து கொண்டே வருகிறது.

பழங்கால இலக்கியங்களை இன்று நாம் அறிந்துகொள்ள உதவியாய் இருப்பவை பனை மரங்களே. பனை ஓலைகளில் எழுதப்பட்ட இலக்கியங்கள் பல நூற்றாண்டு காலம் அழியாமல் காத்து நம் முன்னோர்களின் இலக்கியங்களை நாம் அறிந்து கொள்ள உதவியுள்ளது.



திருவள்ளுவர் கூறும் "பயன்மரம்" பனைமரம் என்றும் கொள்ளலாம்.

மன்னர்கள் காலத்தில் ஏட்டுவரி, ஓலை வரி, தாலவரி கருப்புக்கட்டிவரி நுங்குவரி பனங்கிழங்குவரி நீற்று வரி, என பனைமரத்தினை அடிப்படையாகக் கொண்ட வரி விதிக்கப்பட்டது.

பனைமரத்தினை உவமையாகக் கொண்ட

"காவோலையைப் பார்த்து குறுத்தோலை சிரிச்சுதாம்."

"பனங்காட்டு நரி சல சலப்பிற்கு அஞ்சாது!!!."

பல சொலவடைகள் இன்றும் நம்மிடத்திலே உண்டு.

பனை மரத்திற்கு 101 பெயர்கள் உண்டு. அவை வருமாறு:

| | | |
|---|---|---|
| 1.அசவத்திரு | 21.கருபுறமரம் | 41.தருராசன் |
| 2.ஆசவத்திருமரம் | 22.கரும்பனை | 42.தருராஜம் |
| 3.ஆசவத்துரு | 23.கரும்புல் | 43.தருராஜமரம் |
| 4.உடுபாதகம் | 24.கரும்புறம் | 44.தருவிராகம் |
| 5.உபதாகம் | 25.கற்பகம் | 45.தருவிராகமரம் |
| 6.உலோகபத்திரம் | 26.காமம் | 46.தருவிராகன் |
| 7.எட்கம் | 27.காய்ப்பனை | 47.தருவிராசன் |
| 8.எட்கை | 28.காய்ம்பனை | 48.தலதாலம் |
| 9.ஏடகம் | 29.காயின்பனை | 49.தலம் |
| 10.ஏடகாமரம் | 30.கிருஷ்ணகாயா | 50.தாட்டி |
| 11.ஐந்தரம் | 31.கிருஷ்ணகெந்தம் | 51.தாலம் |
| 12.ஐந்தார் | 32.குலீரம் | 52.தாளம் |
| 13.ஐலாந்தார் | 33.சடாபலம் | 53.தாளவிலாசம் |
| 14.ஐலந்தால் | 34.சாத்துப்பனை | 54.தாளி |
| 15.ஐலந்தால் மரம் | 35.சாற்றுப்பனை | 55.திரணராசன் |
| 16.ஐலந்தாலம் | 36.சாறுபனை | 56.திருணபதி |
| 17.கரகாளம் | 37.சீர்பாகி | 57.திருணராசன் |
| 18.கரதாளம் | 38.சீவந்திக்கிரியம் | 58.தீர்க்கதரு |
| 19.கரதாள மரம் | 39.சீவந்திக்கிரியமரம் | 59.துராபோகம் |
| 20.கருபுறம் | 40.தருராசம் | 60.துராரோகம் |

*61.*துருமசிரோட்டம்

*62.*துருமேகம்

*63.*துருமேகமரம்

*64.*துருமேசுவர்

*65.*துருமேசுவரம்

*66.*நற்பனை

*67.*நீலம்

*68.*நீலமணி

*69.*நீலமணிமரம்

*70.*நுங்கு

*71.*நெடினி

*72.*நெடுஞ்சேவிகம்

*73.* நெடுஞ்சேவிகமரம்

*74.*நெடுமி

*75.*நேயம்

*76.*பகற்பலி

*77.*பனம்

*78.*பனைமரம்

*79.*பிராஞ்சுதீர்க்கம்

*80.*புத்தாளி

*81.*புல்

*82.*புல்லூதியம்

*83.*புற்பதி

*84.*புற்றாளி

*85.*புறப்பி

*86.*பூமிபிசாசம்

*87.*பெண்ணை

*88.*பெண்ணைமரம்

*89.*போந்து

*90.*போந்துகம்

*91.*போந்துகமரம்

*92.*போந்தை

*93.*போநாந்தை

*94.*மகாபத்திரம்

*95.*மகோந்நதம்

*96.*மதுரசம்

*97.*மதுராசம்

*98.*மதுராசமரம்

*99.*மால்

*100.*வரானிகம்

*101.*வரானிகமரம்

பல கிளைகளுடன் உள்ள பனைமரங்கள் ஆங்காங்கே காட்சியளிக்கின்றன. ஆனால் அவற்றின் காய்களில் இருந்து கிடைக்கும் பனைமரங்கள் பல கிளைகளுடன் இருப்பதில்லை.

பனை மரத்தில் ஆண் மற்றும் பெண் என இருவகை மரங்களும் பதநீர் அல்லது பனஞ்சாற்றினைத் தரும். ஆண் பனையே அதிக பதனீரை தரும். பதனீரானது ஆண்டிற்கு 3லிருந்து 5 மாதங்கள் வரை கிடைக்கும். ஒரு மரத்திலிருந்து அதிகபட்சம் 160 லிட்டர் பதனீர் கிடைக்கும்.

குறித்த காலத்தில் ஓலைகள் வெட்டப்பட்டு பாளைகள் சீவி அதனின்று பதனீர் வெளிவருதல் தூண்டப்படுகிறது. பின்னர் அதற்கென தயாரிக்கப்பட்ட பானைகளில் சுண்ணாம்பு பூசப்பட்டு பதனீர் சேகரிக்கப்படுகிறது. பதனீரை உடனடியாக புளித்துப் போகாவண்ணம் சுண்ணாம்பு பாதுகாக்கிறது. பல்வேறு மருத்துவ குணங்களும் சத்துப் பொருட்களும் நிரம்பிய பதனீர் கோடையில் உடலுக்கு குளிர்ச்சியைத் தரவல்லது. சுண்ணாம்பு சேர்க்கப்படாத பதனீர், "பனங்கள்" ஆகிறது. மரத்திலிருந்து இறக்கப்பட்ட பதனீர் அகலமான கொப்பரைகளில் பனைவெல்லம் அல்லது கருப்பட்டி தயாரிக்கப்படுகிறது. நன்கு காய்ச்சி

காய்ச்சப்பட்ட பனஞ்சாறு சரியான பதத்தில் படிகமாக்கப்பட்டு பனஞ் சர்க்கரையாக்கப்படுகிறது. பனஞ்சாற்றிலிருந்து பனங்கற்கண்டும் தயாரிக்கப்படுகிறது.

கோடையின் கடுமைக்கு குளிர்ச்சியை தரவல்ல நுங்கு பதனீர் எடுக்கப்படாத பெண் மரங்களிலிருந்து கிடைக்கிறது. நுங்கில் 93 சதம் தண்ணீரும் மீதம் புரதம் மற்றும் குளுக்கோசும் உள்ளன.

முற்றிய பனம் பழத்தினை வேகவைத்தோ, உலர்த்தி சர்க்கரையுடன் சேர்த்தோ உண்ணலாம். நன்கு பழுத்த பழுத்தில் 50 சதத்திற்கு மேல் நார்ச்சத்து உள்ளது..

பழுத்த பனம்பழத்திலிருந்து பனங்கொட்டை கிடைக்கிறது. இதனை ஒரு மீட்டர் உயரமுள்ள மணல் மேடுகளில் முளைக்கவிடப்படுகிறது, 45 முதல் 60 நாட்களில் முளைக்க ஆரம்பித்து பின் இலைகளுடன் கொண்ட பனங்கிழங்காகிறது. மாவுச் சத்து மிகுந்த இதனை உலர்த்தி பல மாதங்கள் வரை சேமிக்கலாம்.

பனங்கிழங்கிலிருந்து ஸ்டார்ச் தயாரிக்கலாம். மரத்திலிருந்து ஒரு ஆண்டொன்றிற்கு 200 முதல் 300 பனங்கொட்டைகளைப் பெறலாம். பனை மரம் வெட்டப்படும் போது பனங்குருத்தும் உணவாகிறது.

இளம் பனை ஓலையிலிருந்து விசிறி, தொப்பி, கூடை போன்ற பல விதமான கைவினைப்பொருட்கள் கலை நயத்துடன் தயாரிக்கப்பட்டு அவை வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகிறது.



நன்கு காய்ந்த பனை ஓலை கூரை வேயவும், மட்டைகள் வேலியாகவும், எரிபொருளாகவும் பயன்படுகிறது.

பனை ஓலையின் இலையடிப்பகுதியில் பனை நார் எடுக்கப்படுகிறது. தற்போது இயந்திரகளினால் நார் பிரிக்கப்பட்டு பலவித புருசுகள் தயாரிக்சுப்பட்டு பயன்படுத்தப்படுகிறது. பனை ஓலையிலிருந்து கிடைக்கும் ஈர்க்கும் பயன் மிக்கது.

நன்கு முற்றிய பனை நீண்ட நாட்களுக்கு உழைக்கக்கூடிய, உறுதியான மரத்தினை தரவல்லது. சட்டங்கள் செய்யவும், கூரை வேயவும், மர வேலைப் பொருட்கள் செய்யவும் பனை மரம் பயன்படுகிறது. மீதமுள்ள கழிவுகள் எரிபொருளாகவும் பயன்படுகிறது.

ஆண் மரங்கள் பொதுவாக விறகிற்காகவோ அல்லது செங்கல் சூளைக்காக வெட்டப்படுகின்றன. பதனீருக்காவோ, இதர உபயோகங்களுக்காகவோ இவை விரும்பப்படுவதில்லை

பனைத் தொழில் மிக நுட்பமான ஒன்று. எல்லாராலும் மரம் ஏறி இறங்கி பதனீர் இறக்குவது இயலாத காரியம். மிகக் குறைந்த மழை பெய்யும் தரிசு நிலங்களிலும் எந்தவித பராமரிப்பமின்றி நன்கு வளரும் இயல்புடையது. தென்னையை விட பனையில் அதிக வருவாய் பெறலாம்.

எண்ணற்ற பயன்களைப் பெற்றுள்ள பனைத் தொழில் இன்று நலிவுறுதற்கு காரணம் இனிப்பிற்காக பனையை மறந்து கரும்பை காதலித்தால் வந்த வினை. கரும்பின் மூலம் பெரும அளவு சர்க்கரை மற்றும் வெல்லம் தயாரிக்கப்படுவதாலும்,

பனைமரத்தினை சுற்றி பொருளதாரம், வேலை வாய்ப்பு, உடல்நலம் பேனுதல், சுற்றாடல், பறவைகள் மற்றும் விலங்குகள் உள்ளன என்றால் அது மிகையில்லை.

தொன்று தொட்டு பனையை தொழிலாளர்கள் இன்று பிழைப்பிற்காக நகரங்களை நாடி நம்பி வாழ்ந்த பல்வேறு தொழில்களை செய்து வருவதால் வேலைக்கு ஆட்கள் கிடைக்காததால் பல பனந்தோப்புகள் செங்கல் சூளைக்கு விறகாகின்றன. இதனால் நிலத்தின் பசுமைப் போர்வை குறைந்து இன்று மழையளவு குறைவதற்கும் காரணமாக உள்ளது.

பனை ஆராய்ச்சியினை ஊக்குவிக்க பனை ஆராய்ச்சி நிலையம் திருவல்லிப்புத்துரில் அமைக்கப்பட்டுள்ளது இது தவிர காதி நிறுவனம் மற்றும் பனைத் தொழில் வாரியம் போன்றவை பனைத் தொழில் மேம்பாட்டிற்காக நிறுவப்பட்டுள்ளன.ஆனால் பனைத்தொழில் வாரியம் தற்போது நம்மிடம் இல்லை.

*1888ம் ஆண்டு இலங்கையிலிருந்து வில்லியம் பெர்குசன் (William Ferguson) எழுதி வெளியிடப்பட்ட மிக முக்கியமான புத்தகம் The Palmyra Palm- Borassus flabellifer, இதில் எழுதப்பட்ட செய்திகள் கருத்துக்கள் காலத்தை கடந்து நிற்கும் என்றால் மிகையாகாது.*



*இந்த நூலில் பனையைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.*

*"மரங்களின் மீது கோடரியால்*

*பலவந்தமாக அவற்றை அழிக்க வேண்டாம்:*

*நீங்கள் அவற்றை உண்ணலாம், அவற்றை வெட்ட வேண்டாம்.*

*கீழை நாடுகளில் மக்கள் மரம் வெட்டுவதற்கு*

*மிகுந்த வெறுப்பைக் கொண்டுள்ளார்கள்.*

*ஏனென்றால் எந்த ஒரு மரமும் கனிகள் அளிக்க வல்லவை."*

*ஒரு மனிதனை தென்னை அல்லது பனை மரத்தினை வெட்டச்சொன்னால் என்ன சொல்வான் தொியுமா?*

*" என்ன எனக்கு உணவளிக்கும் மரத்தினை வெட்ட வேண்டுமா?"*

அதிலிருந்து தான் என் வீட்டிற்கு மழை வெய்யில் போன்றவற்றை காக்க கூரை வேய ஓலை கிடைக்கிறது .

என்னுடைய விளக்கிற்கு எண்ணெய் கிடைக்கிறது

என்னுடைய சமயலறைக்கு வேண்டிய துடுப்பு அளிக்கிறது.

என்னுடைய அடுப்பிற்கு வேண்டிய கரி கிடைக்கிறது.

எனக்கு வேண்டிய கருப்பட்டி,

என்னுடைய பழங்களை வைக்க கூடை,

என்னுடைய கிணற்றிற்கு வாளி,

என்னுடைய படுக்கைக்கு பாய்,

வெற்றிலை வைக்கப் பெட்டி,

என்னுடைய புத்தகத்தின் தாள்கள்,

என்னுடைய வீட்டிற்கு வேலி,

வீட்டை சுத்தமாக வைத்திருக்க பாய்.

அப்படிப்பட்ட மரத்தினை வெட்டுவது என்பது

சூனியக்காரியிடம்

எனது விலை உயர்ந்த நகைகளை அடகு வைத்துவிட்டு

கடைசி உணவினை சாப்பிடுவது போல."

இந்த நூலில் பனையைப் பற்றி மக்கள் கொண்டிருந்த கருத்துக்கள். மரங்கள் மீதிருந்த நன்றியுணர்வு இன்றளவும் நம்மை பிரமிப்பை அளிக்க வல்லவை.

கற்பகத்தரு பனையை காப்பது நம் கடமை. எதிர்காலத்தில் பனை மரத்தினை புகைப்படத்தில் பார்க்கும் நிலையும் தோன்றலாம். எனவே வறன்ட பகுதிகளில் பனைச் சாகுபடியினை ஊக்குவிக்க வேண்டும். மானாவாரி நிலங்களில் காப்பீடு போல வருமானத்திற்கு உத்திரவாதம் தருவது பனையே.

எனவே வரப்பில் கட்டாயம் பனை மரம் நட வேண்டும். தரிசு நிலச் சாகுபடியில் பனை கட்டாயம் இடம் பெற்றிருக்க வேண்டும். ஏரி மற்றும் குளத்தின் கரைகளிலும் கட்டாயம் பனை மரம் வளர்க்க வேண்டும். வெளி நாடுகளில் இயற்கைச்சார்ந்த பொருட்களை அதிகம் விரும்புதால் பனைப் பொருட்களுக்கு ஏற்றுமதி வாய்ப்புகள் அதிகம் உள்ளது.

இன்று பனைக்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது பனை சார்ந்த தேநீர்க்கடைகள் நெடுஞ்சாலை எங்கும் துவக்கப்பட்டு பனை சார்ந்த பொருட்கள் நுகரப்படுவது நல்ல முயற்சியே. மக்கள் இந்த முயற்சிக்கு அதிக ஆதரவு அளித்தால் பனையும் நன்றாக வளரும் மக்களின் ஆரோக்கியமும் பெருகும்.

பனைமரம் ஏற ஆள் இல்லை என்றாலும் பயன் தர வல்லது. ஓலைகளை கலைப்பொருட்கள் ஆக்கலாம். கீழே விழும் பனம் பழத்தினை முளைக்க வைத்து பனங்கிழங்குளாக விற்கலாம். பனங்கிழங்குலிருந்து பல மதிப்பு கூட்டுபொருட்கள் தயாரிக்கலாம். ஒவ்வொரு பனைமரமும் விவசாயிக்கு ஒரு இட்டுவைப்பாகத்தான் திகழும். இன்று நட்டுவைக்கும் பனைமரம் குறைந்த பட்சம் 15 ஆண்டுகள் கழித்து தான் பயனுக்கு வரும். ஆனால் ஒவ்வொரு ஆண்டும் ஒரு மரம் 10 குலைகள் தரும். 200 காய்களுக்கு மேல் கிடைக்கும்.

தரிசாக கிடைக்கும் நிலங்கள் யாவும் பனை நடவு செய்யப்பட்டால் எப்படி அரபு நாட்டில் பேரிச்சை மரங்கள் இருக்கிறதோ தமிழகத்தில் பனை மரங்கள் எதிர்கால சந்ததிகளுக்கு சொத்தாக அமையும். இவை எந்த உரத்தையும் தண்ணீரையும் எதிர்பார்ப்பதில்லை. பனைக்கு தேவையெல்லாம் அவற்றை கனிவுடன் சேகாித்து நாற்றுக்களாக வளர்த்து மழைக்காலத்தில் நட்டால் மட்டும் போதும்.

ஒவ்வொருவர் இல்லத்திலும் ஒரு பனை பொருளாவது இருக்க வேண்டும். ஒவ்வொருவரும் தினமும் ஒரு பனை பொருளாவது உணவாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

பனைப் பொருட்கள் எந்தவித இரசாயனமும் கலவாதது. பனைத் தொழிலை ஊக்குவிக்க பனைப் பொருட்களை ஆதரித்து பனைப் பொருட்களுக்கு நல்ல விற்பனை வாய்ப்பினை ஏற்படுத்த வேண்டும்.

மேலும் நவீன நுட்பங்கள் மற்றும் இயந்திரங்கள் பெருகி பனைத் தொழில் இலாபகரமானதாக அமைய வேண்டும்.

பனை மரம் வெட்டப் பட்டு விறகாவதை தடை செய்ய வேண்டும். புதிய தோப்புகள் உருவாகுவதை ஊக்குவிக்க வேண்டும். பனை மரத்தினை வெறும் மரமாக பார்க்காமல் ஒரு வாழ்க்கை ஆதாரமாக இருப்பதை கருத்தில் கொண்டு அக்கரையுடன் வளர்க்க வேண்டும்.

# வைக்கம் ஜாதி ஒழிப்புப் போராட்டம்

**கவிஞர் வழக்கறிஞர் கனிமொழி,**
*வெர்ஜினியா, அமெரிக்கா*
*பெரியார் அம்பேத்கர் படிப்பு வட்டத்தின்*
*அமெரிக்க ஒருங்கிணைப்பாளர்.*



*ஜாதி ஒழிப்பிற்காகவே பல்வேறு போராட்டங்களை தந்தை பெரியார் முன்னெடுத்தார். அதில் முக்கியமானது வைக்கம் போராட்டம். இந்த ஆண்டு 2024, வைக்கம் போராட்டத்தின் வெற்றியைக் குறிக்கும் நூற்றாண்டு. எத்தனை இடர்கள் வந்தபொதும் பின்வாங்காமல் பெரியார் போராட்டக் களத்தில் நின்றார். எனவே தான் தமிழ்நாட்டின் முதலமைச்சரும் கேரளத்தின் முதலமைச்சரும் இணைந்து சிறப்பான விழாவினை வைக்கத்தில் நடத்தினர்.*

*வைக்கம் போராட்டத்திற்கு எவ்வாறு அய்யா அழைக்கப்படார் என்பதை பெரியாரே கூறுகிறார்...*

*தோழர் மாதவன் என்ற பி.ஏ,பி.எல்., படித்த ஒரு வக்கீல் ஒரு வழக்குக்காக ஆஜராகப் போனார். வழக்கு விசாரணைக்கான கோர்ட் இடம் ராஜாவுடைய கொட்டாரத்தில் (அரண்மனையில்) ஓர் இடம். இராஜாவின் பிறந்தநாள் விழாவிற்கு அந்த இராஜாவுடைய கொட்டாரத்தில் (அரண்மனையில்) எல்லா பாகத்திலும் பந்தல் போடப்பட்டதில் கோர்ட் நடக்கும் இடமும் பந்தலுக்குள் ஆகிவிட்டது. இந்த மாதவன் வக்கீல் ஒரு கேசில் ஆஜராக அங்கே போகவேண்டிய அவசியம் வந்தது. இராஜாவின் பிறந்தநாள் கொண்டாட்டத்திற்காக முறை ஜெபம் ஆரம்பமாயிற்று. அங்கே இந்த வக்கீல் ஈழவ (நாடார்) சமுதாயத்தைச் சேர்ந்தவராதலால் அங்கே போகக்கூடாது என்று தடுத்தார்கள்.*

*அந்த வீதிகளில் கீழ்ஜாதிக்காரர்களான அவர்ணஸ்தர்கள் எல்லோரும் ஆயித்தக்காரர்கள் எனப்படும் தீண்டாதாரும் நான்கு புறத்திலும் கோயில் வாசல்களுக்கு முன்னால் நடக்கக்கூடாது; மூன்று ஃபர்லாங் தூரத்திலேயும் 4 ஃபர்லாங்கு தூரத்திலேயும் இருக்கிற ரோட்டில் கூட நடக்காமல் ஒரு மைல் தூரம் வேறு ரோட்டில் சுற்றிக் கொண்டுதான் எதிர்ரோட்டுக்குப் போகவேண்டும். ஆயித்தக்காரர் தீண்டப்படாதவர்களைப் போலவேத்தான் ஈழவர்கள், ஆசாரிகள், வாணியர்கள், நெசவாளிகள் முதலியோரும் அந்த ரோட்டில் நடந்து போகக்கூடாது. இதே மாதிரிதான் சுசீந்திரத்திலும் உள்ள கோயில் மற்றும் அந்த ராஜ்யத்தில் உள்ள மற்ற கோயில்கள் பக்கமும் அமைந்துள்ளத் தெருக்களிலும் நடக்க இவர்களுக்கு எந்தவித உரிமையும் கிடையாது. வைக்கத்தில்*

கோவிலுக்குப் பக்கமாக வாசலுக்கு எதிராக அமைந்த தெருக்களில்தான் எல்லா முக்கிய ஆஃபீசுகளும், கோர்ட், போலீஸ் ஸ்டேஷன் முதலியனவும் இருந்தன. ஏதாவது போலீஸ்காரர்களையோ இன்ஸ்பெக்டர் களையோ குமாஸ்தாக்களையோ மாற்றுவதனாலுங்கூட கீழ்ஜாதியார்களை அங்கு மாற்றமாட்டார்கள். ஏனென்றால் அந்த போலீஸ் ஸ்டேஷன் கோர்ட்டுகள் இருக்கும் இடத்திற்குப் போக கீழ்ஜாதியார்களுக்கு அனுமதி கிடையாது என்பதால் முக்கியமான கடைகளும் அந்த வீதிகளில்தான். ஆனதால் கீழ்ஜாதிக் கூலிகள் அங்கு செல்ல முடியாது. போராட்டமும் கைதும் சத்தியாக்கிரகம் ஆரம்பமானவுடன் வக்கீல் மாதவன், பாரிஸ்டர் கேசவமேனன், டி.கே. மாதவன், ஜார்ஜ் ஜோஸஃப் முதலியவர்களைப் போல் சுமார் 19 பேரை ராஜா அரஸ்ட் செய்யும்படி உத்தரவிட்டு அதன்படி அவர்கள் கைது செய்யப்பட்டார்கள். தினசரி ஒருவர் வீதம் கைது செய்து அவர்களை மாத்திரம் தனிப்பட்ட முறையில் ஸ்பெஷல் கைதிகளாக நடத்த உத்தரவிட்டார்கள்.



அப்போது இராஜாவிடம் மிஸ்டர் பிட் என்ற ஒரு வெள்ளைக்காரர் போலீஸ் அய்.ஜி.யாக இருந்தார். அவர் இந்த சத்தியாக்கிரகத்தை வெகு சாமர்த்தியமாகவும் ரொம்பவும் ஜாக்கிரதையாகவும் சமாளித்தார். இந்த பத்தொன்பது பேரைப்பிடித்து உள்ளேபோட்டுவிட்டவுடன் அடுத்து சத்தியாகிரகத்தில் ஈடுபட யாரும் ஆள் கிடைக்கவில்லை. அதோடு அதுவும் நின்றுவிடும் போலத் தோன்றியது. உடனே எனக்கு பாரிஸ்டர் ஜார்ஜ் ஜோசஃபும், கேசவமேனனும் சேர்ந்து கையெழுத்துப் போட்டு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார்கள். நீங்கள்

வந்துதான் இதற்கு உயிர் கொடுக்கணும்; இல்லாவிட்டால் நாங்கள் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதைத் தவிர வேறுவழியில்லை. அப்படி மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதனால் எங்களுக்கு ஒன்றும் நஷ்டம் இல்லை என்றாலும் பெரிய காரியம் கெட்டுப் போகுமே என்றுதான் கவலைப்படுகிறோம். உடனே நீங்கள் வந்து பொறுப்பு ஏற்கவேண்டும் என்று எழுதி அனுப்பினார்கள்.

எனக்கு ஏன் எழுதினார்கள் என்றால் தீண்டாமையைப் பற்றி பேசுவதில் நான் கெட்டிக்காரன், கிளர்ச்சியிலும் நான் கெட்டிக்காரன் என்று எனக்குப் பேர். நான் அப்போது சுற்றுப்பிரயாணத்தில் இருந்தேன். ஈரோட்டிற்கு எழுதப்பட்ட அந்தக் கடிதம் ரீ டைரக்ட் செய்யப்பட்டு மதுரை ஜில்லாவில் உள்ள பண்ணபுரம் என்ற ஒரு மலைப்பக்கக் கிராமத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவன் என்ற முறையில் நான் பேசிக் கொண்டிருந்தபோது என் கைக்குக் கிடைத்தது. திடீர் பயணம் போருக்கு! உடனே மீதி சுற்றுப்பயண நிகழ்ச்சிகளை எல்லாம் ஒத்திப்போட்டுவிட்டு நேரே ஈரோட்டுக்குப் போனேன். வீட்டுக்கு வந்தவுடன் வைக்கத்திற்குப் போய் சத்தியாக்கிரகத்தை நடத்துவதென்று மிக்க மகிழ்ச்சியோடு மூட்டைக் கட்டிவிட்டேன்.''

ஒரு போராட்டித்திற்கு செல்ல அய்யா எவ்வளவு உற்சாகமாகக் கிளம்பியிருக்கிறார் என்பதை எண்ணும்போது வியக்காமல் இருக்க முடியவில்லை.

அப்படி போகும்போது திருவிதாங்கூர் மகாராஜா தந்தை பெரியாருக்கு அவர் சார்பில் வரவேற்பு நல்கிட உத்தரவு பிறப்பிக்க பெரியார் அதனை ஏற்கவில்லை. அவர்களை எதிர்த்து போராட்டம் செய்ய வந்துவிட்டு அவர்கள் கொடுக்கும் மரியாதையை ஏற்பது சரியானது அல்ல எனக் கூறிவிட்டார். மகாராஜா டெல்லி செல்லும்போது ஈரோட்டில் பெரியாருக்குச் சொந்தமான மாளிகையில் தங்குவது வழக்கம் ஆதலால் அவருக்கு வரவேற்பு நல்கிடக் கூறினார் என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் பெரியாரின் நேர்மையை நாம் இங்கு பாடமாக எடுத்துக் கொள்ள வேண்டும். யாரை எதிர்த்து பேச வந்துள்ளோமோ அவர்களுடன் சமரசம் ஏற்படுத்திக் கொள்ளும் சாயத்தை ஏற்படுத்திவிடக் கூடாது என்பதில் பெரியார் கவனமாக இருந்தார்.

பெரியார் கராசாரமாகப் போராட்டக்களத்தில் பேசத் தொடங்கியவுடன் மகாராஜாவிடம் பலர் முறையிட்டனர். மகாராஜா தடை உத்தரவு பிறப்பித்தார். தடையை மீறி பேசிய பெரியார் கைது செய்யப்பட்டார். கைது செய்யுமளவிற்கு என்னதான் பேசினார் பெரியார்?

- தொடரும்

# கற்பூரம் நாறுமோ



**பேராசிரியர் முனைவர் மு முத்துவேலு**
முதல் பதிவாளர்
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்
சென்னை.

கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித்தி ருக்குமோ
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன்
சொல்லாழி வெண் சங்கே
எனவருவது ஆண்டாள் நாச்சியார் திருமொழி.

இப்பாடலில் கற்பூரம் நாறுமோ என்பதும் கமலப்பூ நாறுமோ என்பதும் பச்சைக் கற்பூரத்தின் நறுமணத்தையும் கமலப் பூவின் நறுமணத்தையும் சுட்டுகின்றன. இப்பாடலில் நாற்றம் என்பது இனிய மணத்தையே எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

இதே நாற்றம் என்ற சொல்லை இன்றைக்கு ஒரு கவிஞர் பயன்படுத்தி எழுதுவாரே ஆனால் அதன் பொருள் என்னவாக இருக்கும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

கூவம் நாறுதே
குப்பைமேடு நாறுதே
பாவம் சென்னை வாழ்க்கை
பரிதாபம் ஆனதே

என்று ஒரு பாடல் அமையுமானால் இங்கே நாறுதே என்னும் சொல் மனம் விரும்புகிற மணத்தைக் குறிப்பதில்லை. துர்நாற்றம் என்று மனம் சகித்துக் கொள்ள முடியாத பொருளைக் குறிக்கும் சொல்லாக இருக்கிறது.

எனவே நாற்றம் என்னும் சொல் நறுமணம் என்னும் பொருளில் வழங்கி வந்த நிலையில் இருந்து மாறி,அதற்கு எதிரான பொருளை வழங்கி வருவதற்கான காரணத்தை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**நாற்றம் என்பது பொதுச்சொல்**

நாற்றம் என்னும் சொல் மனத்திற்கு இனிய மணத்தை அல்லது மனத்திற்கு ஒவ்வாத மணத்தை எனப் பிரித்துப் பார்க்காமல் இவை இரண்டையும் சேர்த்துக்

குறிக்கின்ற ஒரு பொதுச் சொல்லாகப் பயன்பட்டு வந்துள்ளது.இதற்கான எடுத்துக்காட்டை நாம் திருக்குறளில் காண்கிறோம்.

*சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என்று ஐந்தின்*
*வகை தெரிவான் கட்டே உலகு.*
*திருக்குறள் எண் 27*

இக்குறளில் ஐம்புலன்களில் வழி உணரப்படுவனவற்றைக் குறிக்கின்ற பொழுது சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என வருபனவற்றுள் நாற்றம் என்ற சொல்லும் வருகின்றது. இந்தச் சொல் மூக்கினால் உணரப்படும் பொதுவான மணத்தைக் குறிக்கிறது.இங்கே நறுமணத்தை அல்லது துர்நாற்றத்தை என்று பிரித்துக் குறிக்கவில்லை. எனவே வள்ளுவர் நாற்றம் என்று சொல்லை மணத்தைக் குறிக்கின்ற பொதுச் சொல்லாகவும் பயன்படுத்தி இருக்கிறார் என்பதை நாம் உணர முடிகிறது.

இந்த நாற்றம் என்னும் சொல்லை வள்ளுவர் நறுமணம் என்னும் பொருளிலும் பயன்படுத்தி உள்ளார்.

*' முறைமேனி முத்தம்முறுவல் வெறிநாற்றம்*
*வேல்உண்கண் வேய்த்தோள் அவட்கு"*
என்னும் குறளிலும்
*குறள் எண் (1113)*
என்னும் குறளிலும்,

*"முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை*
*நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு"*
*திருக்குறள் (1274)*

என்னும் குறளிலும் நாற்றம் என்னும் சொல் நறுமணத்தைக் குறிக்கின்ற சொல்லாக உள்ளது.

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான புறநானூற்றில் நாற்றம் என்னும் சொல் இரண்டு பாடல்களில் அமைந்துள்ளது.

உறையூரில் வாழ்ந்த முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் தம் நாட்டின் சிறப்பினை எடுத்துக் கூறுகிற போது

"புள்ளி வைத்த குழு நிண நாற்றம் மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து

என முள்ளம் பன்றிகளைக் கொன்ற வீரர்கள் அறுத்தெடுத்த உடும்பின் இறைச்சியை ஒரு மரத்தின் கம்புகள் கொண்டு அமைக்கப்பட்ட படலுடைய வீட்டின் முற்றத்தில் எல்லோரும் பகிர்ந்து உண்பதற்காக நெருப்பிலிட்டு

வாட்டுவார்கள்.அப்படி வேகும் இறைச்சியின் மணம் தெருவெல்லாம் பரவும் என்று குறிப்பிடுகிற போது அந்த இறைச்சியின் மணத்தைச் சுட்டுவதற்கு நிண நாற்றம் என்று குறிப்பிடுகிறார் புலவர்.இந்த நிண நாற்றம் என்பது இறைச்சியின் மணம் என்றாலும் அது உண்பவர்களுக்கு இன்பமாகவும் மகிழ்ச்சியும் தருகிற மணம் என்பதால் இங்கே நாற்றம் என்ற சொல்லும் இனிய நாற்றம் மனம் கவர் நாற்றம் என்று உடன்பாட்டுச் செய்தியில் தான் குறிப்பிடப்பட்டுள்ளது என்பதை நாம் அறிந்து கொள்ள முடியும்.

(புறநானூறு பாடல் எண் 325)

சங்கப் புலவர் கபிலர் அந்நாட்டு பெண்கள் இல்லத்தில் இருக்கிற பொழுது அந்த இல்லத்தின் அழகினை குறிப்பிட்டுப் பாடுகிறார்.அப்பொழுது,

"அகிலார் நறும்புகை ஐதுசென்றுஅடங்கிய
கபில நெடுநகர்க் கமழும் நாற்றமொடு
மனைச் செறிந்தனளே வாணுதல்"
(புறநானூற்று பாடல் எண் 337)

என்று வருகிற புறநானூற்றுப் பாடலில் இங்கே நாற்றம் என்பது அகில் புகையின் இனிய நாற்றம் என்னும் பொருளில் வந்துள்ளது.

எட்டுத்தொகை நூல்களில் அகப்பொருள் பற்றிய நூல்களில் ஒன்றான குறுந்தொகையில் குறுங்கீரன் என்னும் புலவர் கார்கால முல்லை நிலத்தின் அழகினை வருணிக்கிறார். அப்போது அங்கே பூத்துக் குலுங்கும் மலர்களின் நறுமணத்தைக் குறிப்பதற்கு நாற்றம் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

"தண்துளிக்கு ஏற்ற பைங்கொடி முல்லை
முகைதலை திறந்த நாற்றம் முதல்மிசை
பூமலி தளவமொடு தேம்கமழ்பு கஞல"
(குறுந்தொகை 382)
என வரும் பாடலை எடுத்துக்காட்டலாம்

**நாறும் என்னும் சொல்**

நாற்றம் என்னும் சொல்லில் அடியில் தோன்றிய நாறும் என்னும் சொல் சங்க இலக்கியங்களில் மணக்கும் நல் மணம் கமழும் என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. இதற்கான எடுத்துக்காட்டுகளைக் குறுந்தொகையில் இருந்தே காண்பது பொருத்தம் உடையதாகும். தலைவன் கூற்றாக அமைந்த பரணர் எழுதிய பாடலில் தலைவியின் உடல் அழகைப் பாராட்டும் பொழுது

அவளுடைய கூந்தலின் நறுமணத்தைப் பாராட்டுகிறார்.அப்பொழுது அவளுடைய கூந்தல் ஒளிவீசும் முல்லை மலர்கள் மணம் வீசுவதற்கு இடமாக அமைந்துள்ளது. அத்தகைய கூந்தலை உடையவள் என்று அவள் கூந்தலைச் சிறப்பித்துப் பாடுகிறார்.

*"எல்உறு மௌவல் நாறும்*
*பல்இரும் கூந்தல் யாராளோ நமக்கே "*
*(குறுந்தொகை 19 -4 )*

*தலைவியின் கூந்தல் அழகினை எடுத்துக் கூறும் தோழி,*
*"நரந்தம் நாறும் குவைஇரும் கூந்தல்'*
*(குறுந்தொகை 52)*

என்று நரந்தும் பூவின் மணம் கமழ்கின்ற ஐந்து பகுதிகளாக முடித்து முடித்த கரிய கூந்தலை உடையவள் தலைவி என்று கூறுகிறாள். தலைவன் மார்பில் அணிந்திருக்கும் மாலையின் நறுமணத்தைக் குறிக்கின்ற தலைவி தலைவியின் கூற்றாக அமைந்த நக்கீரர் பாடலில்,

*"ஆரம் நாறும் மார்பினன்*
*மாரி யானையின் வந்து நின்றனனே"*
*நாறும் என்ற சொல் அமைந்திருப்பதைக் காணலாம்*
*(குறுந்தொகை 161)*

தலைவியைத் தழுவியதால் தலைவியின் மேனியில் இருந்த முல்லை மலர் வாசம் தன்னுடைய தோள்களிலும் வீசுகிறது என்று தலைவன் கூறுவதை அரிசில் கிழார் இவ்வாறு அருமையாகப் பாடியுள்ளார்.

*" தொல்லைத் திங்கள் நெடுவெண் நிலவின்*
*மணந்தனன் மன்னெடுந் தோளே*
*இன்றும் முல்லை முகைநா றும்மே"*
*( குறுந்தொகை 193 )*
*எனவரும் குறுந்தொகைபா பாடல்களில் மட்டுமல்லாமல்,*
*குவளை நாறும் குவையிலும் கூந்தல் ஆம்பல் நாறும் தேம்புதித்து வருவாய்*
*குறுந்தொகை 300*

எனவரும் குறுந்தொகைப் பாடலிலும் இந்த நாறும் என்னும் சொல் மலர்களின் மணத்தைக் குறிப்பதற்காகவும் மாலைகளின் மணத்தைக் குறிப்பதற்காகவும், வாயிலிருந்து எழும் இனிய வாசனையைக் குறிப்பதற்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை நாம் காண்கிறோம்.

அகப்பாடலான ஐங்குறுநூற்றிலும் முல்லைத் திணையில் அமைந்த கிழவன் பருவம் பாராட்டுப் பத்தில் வருகிற பாடல்களிலும் நாறும் என்னும் சொல் மணத்தைக் குறிப்பதற்காக அமைந்துள்ளது

*நின்நுதல் நாறும் நறும் தண் புறவில் நின்னே போல மஞ்ஞை ஆல*
*( ஐங்குறுநூறு 413)*

இப்பாடலில் தலைவியின் அழகைப் புகழ்ந்து பாடும் தலைவன், தலைவியின் நெற்றியில் இருந்து வீசும் நறுமணத்தைப் போல முல்லை நிலம் மணம் வீசித் திகழ்கிறது என்று பாடுகிறான்.



ஐங்குறுநூற்றில் மற்றொரு தலைவன் தன் தலைவியின் கூந்தல் மணத்தை இவ்வாறு பாடுகிறான்:

"முல்லை நாறும் கூந்தல் கமல் குல
நல்ல காண்குவம் மா அயோயே"

(ஐங்குறுநூறு முல்லைத்திணை பாசறைப் பத்து 446,)இப்பாடலில் முல்லைப் பூவால் நறுமணம் கமலும் நின் கூந்தல் மேலும் பல மலர்களால் மணம் கமழும் வண்ணம் நல்ல இன்பங்களை நுகர்வோம் என்று தலைவியை நோக்கி தலைவன் அழைப்பதாக இந்த அகப்பாடல் அமைந்துள்ளது.

ஐங்குறுநூற்றில் அமைந்த வரவு சிறப்பு உரைத்த பத்திலும் நாறும் என்னும் சொல் மலர்களின் மணம் கமழ்ந்து திகழ்வதையே குறிக்கிறது.

*நின்னை போலும் மஞ்ஞை ஆல நின் நல் நுதல் நாறும் முல்லை மலர,*
*ஐங்குறுநூறு 492.*

இப்பாடலில் தலைவியை நோக்கி தலைவன்

உன்உன் அழகிய நெற்றி போல் நறுமணம் கமழும் முல்லை மலர்கிறது என்று பாடுகிறான்..

பத்துப்பாட்டு நூல்களில் ஒன்றான மலைபடுகடாம் என்னும் பழந்தமிழ் பாடலிலும் நாறும் என்னும் சொல் மணம் கமழும் என்னும் பொருளில் வந்துள்ளது.

இப்பாடலில் பானுவுடன் நடந்து வரும் விறலியின் அழகை பாடும் போது வண்டுகள் மொய்க்கும் மணம் வீசும் கூந்தலை உடைய பெண் அவள் என்று பாடுகிறார்

*“வதுவை நாறும் வண்டுகமழ் ஐம்பால் மடந்தை மாண்ட நுடங்கு எழில் ஆகத்து”*
*( மலைபடுகடாம் 30- 31).*

**நாறும் நாற சொல் பொருள் விளக்கம்**

நாறும் என்னும் சொல் மனம் கமலும் என்னும் பொருளில் ஆளப்பட்டு உள்ளதை சங்க இலக்கியங்கள் நமக்கு சான்று பகர்கின்றன அதேபோலவே நாறா என்னும் சொல் மனம் வீசாதே என்னும் பொருளில் வழங்கி உள்ளதற்குத் திருக்குறள் நமக்கு எடுத்துக்காட்டுகிறது

*‘‘இணரூழ்த்தும் நாறாமலர் அனையர் கற்றது*
*உணர விரித்துரை யாதார்’’*
*(திருக்குறள் 650)*

சொல்வன்மை அதிகாரத்தில் இடம்பெறும் இக்குறள் தான் கற்றதை மற்றவர் மனதில் பதியுமாறு உரைப்பதற்கு சொல்வன்மை அற்றவர்களுக்கு உவமலயாகச் சொல்லுகிற பொழுது அழகான இதழ்களை கொண்ட மலராக இருந்தாலும் அது மனம் பரப்பவில்லை என்றால் அதனால் எந்தவித பயனும் இல்லை என்று கூறுகிறார் மணம் வீசாத மலர் என்பதை சுட்டிக்காட்டுவதற்காக நாறா மலர் எனும் தொடரை வள்ளுவர் இங்கு ஆண்டு இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**நாற்றமும் வாசமும்**

தமிழ் இலக்கிய வரலாற்றில் காப்பியங்கள் இயற்றப்பட்ட காலத்தில் நாற்றம் என்னும் சொல்லுக்கு இணையான வாசம் என்னும் வடமொழி சொல்லும் வந்து அமைந்திருத்தலை காண்கிறோம்

மலரின் மணம் வீசும் என்று பொருளில் மலரின் வாசம் வீசும் என்னும் தொடர் இங்கே ஆளப்பட்டுள்ளது என்பதற்கு சிந்தாமணியில் இருந்து ஓர் எடுத்துக்காட்டைக் காணலாம்.



*"காவின்மேல் கடிமலர் தெகிழ்ந்த நாற்றமும்*
*வாவியுள் இனமலர் உயிர்த்த வாசமும் பூவிரி கோதையர் புனைந்த சாந்தமும்*
*ஏவலாற்கு எதிர்எதிர் விருந்து செய்தவே"*
*( சீவக சிந்தாமணி 1935 )"*

இப்பாடலில் கடிமலர் நாற்றமும் இனமலர் வாசமும் என்று நாற்றமும் வாசமும் ஒத்த பொருளை உணர்த்துகின்ற சொற்களாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன..

**வாசமும் வாசனையும்**

நாற்றம் என்னும் சொல்லுக்கு இணையாக வாசம் என்னும் சொல் வழக்கில் வந்தது பின்பு வாசம் என்னும் சொல் நீண்டு வாசனை என்னும் சொல்லாகி வழக்கத்தில் வந்தது

எனவே வாசனை என்பது நறுமணம் என்னும் பொருளில் நாளடைவில் பயன்பாட்டுக்கு வந்த அமைந்தது பூ வாசனை என்பது பூ மணம் என்னும் தொடருக்கு இணையான தொடராக விளக்கத்திற்கு வந்து விட்டது.

நறுமணப் பொருட்களை குறிப்பதற்கு வாசனை திரவியங்கள் தமிழில் எழுந்தது. வாசனை என்ற வடசொல் திருபு தமிழில் நாற்றம் என்னும் சொல்லாட்சி நாளடைவில் குறைத்து விட்டது எனலாம்.

இதன் எதிரொலியாகவே

கழுதைக்கு தெரியுமா கற்பூர வாசனை
என்னும் பழமொழியும் உண்டானது எனலாம்.

இங்கும் கற்பூர என்பது பச்சை கற்பூரத்தின் நறுமணத்தை குறிப்பர். வாசனை என்பது நாற்றம் என்னும் பொருளில் அமைந்திருக்கிறது

இதைப் போலவே நாறும் என்னும் சொல்லுக்கு இணையாக வீசும் என்னும் சொல்லும் உருவானது மலர்மனம் கமலும் என்னும் தொடருக்கு இணையாக மலர்மனம் வீசும் என்னும் புதிய சொல்லாக்கம் தமிழில் உருவாகிவிட்டது

இதனை ஒட்டியே

வாசமில்லா மலரிது வசந்தத்தைத் தேடுது

என்ற திரைப்படப் பாடலும் ஒலிக்கக் காண்கிறோம்

**மணம் வீசுதல்**

வீசுதல் என்னும் சொல் ஒரு பொதுச் சொல்லாக இருந்து. மணம் வீசுதல் என்பது நறுமணம் வீசுதல் என்னும் பொருளில் வருவதுடன். மனம் வெறுக்கின்ற துர்நாற்றத்தையும் வீசுகிறது என்ற பொருளிலும் வழங்குகிறது.

எங்கோ மணம் வீசுதே என்றும்
என் கோமணம் வீசுதே என்றும்
தமிழில் வருகிற தொடர்களைக் காண்கிறோம். இங்கே வீசுதே என்ற சொல் அருவருக்கத்தக்க மணத்தையும் குறிப்பதற்குப் பயன்பட்டுள்ளது..

எனவே தற்காலத் தமிழ் அகராதியில் நாற்றம் என்னும் சொல்

அருவருப்பான வாசனை, துர்நாற்றம், சாக்கடை நாற்றம் என்னும் பொருளில் வருவதைச் சுட்டிக் காட்டுகிறது.. இதற்கு எடுத்துக்காட்டாக சாக்கடை நாற்றம் குடலைப் புரட்டுகிறது, வியர்வை நாற்றம் அடிக்கிறது என்னும் பேச்சு வழக்குத் தொடர்களையும் நாம் எடுத்துக்காட்டாகக் காட்டலாம்.

நாற்றம் என்ற சொல் திரிந்து பொருள் பெற்றதைப் போலவே நாறும் என்ற சொல்லும் இன்று திரிந்து விட்டது. அதன் பொருள் இழிந்த பொருளைச் சுட்டுவதாக அமைகிறது.



நாற்றம் வீசுதல், அழுகிய முட்டை நாறும்,அதிகாரிகள் சண்டையால் அலுவலகமே நாறுகிறது எனவரும் தொடர்களில் நாறும் என்ற சொல் இழிவான பொருளில் வந்திருப்பதைக் காண முடிகிறது.

நாற்றம் என்னும் நற்றமிழ்ச் சொல் உணர்த்த வந்த பொருளைச் சுட்டுவதற்கு வாசம் வாசனை என்ற வட சொற்கள் தமிழில் வந்து புகுந்தன. இந்த இரு சொற்களின் வருகையால் நாற்றம் நறுமணம் என்னும் பொருள்நிலையை இழந்து,"இழிவுச் சிறப்புப்பொருட்பேறை" ப் "பெற்று விட்டது.

எனவே இன்று நாற்றம் என்று சொன்னால் அது விரும்பத் தகாத வாசனை என்னும் பொருளைக் குறிக்கும் சொல்லாக ஆளப்பட்டு வருகிறது.

# சோழர்கால ஓவியங்கள் - 8

**மாரிராஜன்**
சோழர் வரலாற்று ஆய்வுச் சங்கம் - சென்னை.



கருவறையைச் சுற்றியுள்ள சாந்தார அறையின்
மேற்குச்சுவற்றில்...
சுந்தரரின் ஓவியத் தொகுப்பிற்கு அடுத்து...
Chamber no 9. என்று அடையாளப்
படுத்தப்பட்டுள்ள இடத்தில் உள்ளது இவ்வோயியம்..

இவ்வோயியத்தின் மிகச்சிறப்பான அம்சம் யாதெனில் பேரரசர் இராஜராஜசோழரின் உருவம் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது.

ஆடவல்லான் என்னும் நடராஜர் தில்லை பொன்னம்பலத்தில் ஆடும் ஆனந்த நடனம்.
அம்பலத்தில் ஆடும் ஆடவல்லானின் ஆட்டத்தை இராஜராஜர் தன் தேவியர்களோடு கண்டு பரவசமடையும் அற்புதக்காட்சியே இவ்வோயியமாகும்.

அகிலத்தையும் ஆட்டி வைக்கும் ஆடலரசனான நடராஜர் மேல் கொள்ளைப் பிரியம் இராஜராஜருக்கு

நாவுக்கரசர் உதிர்த்த ஆடவல்லான் என்னும் சொல்லின் மேல் அதீத ஈர்ப்பு கொண்டார் இராஜராஜர்.

தஞ்சை பெரியகோவில் கல்வெட்டுகளில் பல இடங்களில் ஆடவல்லான் என்னும் பெயர் ஆக்ரமித்துள்ளது.
தராசும் அதன் எடைக்கல்லுக்கும் ஆடவல்லான் பெயர். மரக்காலுக்கும் ஆடவல்லான் பெயரே இருந்துள்ளது.

பெரும்பாலான அனைத்து சிவாலயங்களிலும் தவறாமல் சிற்பமாக இருப்பவர் நடராஜர்..

வலது காலை முயலகன் முதுகின் மேல் ஊன்றி, இடது காலை உடம்புக்கு குறுக்காகத் தூக்கி நான்கு கரங்களுடன் வலப்புற மேற்கை உடுக்கையைத் தாங்க இடப்புற மேற்கை தீச்சட்டி ஏந்த வலது கீழ் கை அபய ஹஸ்த முத்திரையுடன் இடது கீழ்க் கை கஜ ஹஸ்த முத்திரை காட்ட மயிலறகு வடிவ மகுடத்தில்

அரவம் இருக்க பிறையுடன்
விரிசடையில் கங்கையும் இருக்க
அகிலத்தின் இயக்கமும் நானே என்ற
தத்துவத்தின் சான்றாக ஆடவல்லான்
உருவம் கட்டமைக்கப்பட்டுள்ளது.
ஆடவல்லானை ஒரு சிற்பமாக
செப்புப் படிமமாக நாம் பல
இடங்களில் பார்த்திருப்போம்.


ஓவியத்தின் முழுமையானக் காட்சிகள்.

ஆனால் ஒரு ஓவியமாக தஞ்சை
பெரியகோவிலில் மட்டுமே
முழுமையாகக் காணமுடியும்.

சிதம்பரம் என்னும் தில்லைச்
சிற்றம்பலம்.
பொன்னம்பலம் என்னும்
பொற்சபையில் ஆடவல்லான் ஆடும்
ஆட்டத்தை இராஜராஜர் தன்
தேவியரோடு கண்டு களிப்புறும்
காட்சியை
மிகச் சிறப்பான ஓவியமாக வரைந்துள்ளனர்.

ஒரு பறவைப் பார்வை என்னும் மேலிருந்து கீழ் நோக்கும் காட்சியை கிடை மட்டமாக நம் கண்களுக்கு மிக அருகில் காட்சியாக வரைந்துள்ள அதி அற்புத ஓவியயம் இதுவாகும்.

ஓவியத்தைப் பார்த்தால்.

சிதம்பரம் என்னும் தில்லைச்சிற்றபலம்.
நான்குபுற திருச்சுற்றுடன் கோபுர வாயில்களுடன் உள்ள ஆலயம்..

ஓவியத்தின் மேல்ப்பகுதியில் மேற்குப்பகுதி கோபுர வாயிலில் காவலர்கள் உள்ளனர்.

சண்டிகேசுவரர் சந்நிதியும் உள்ளது.

கீழ்ப்புறம் உள்ள கோபுர வாயில் வழியாக பொதுமக்கள் வருகின்றனர்..



அரசகுலப் பெண்கள் - பொதுமக்கள்.



இராஜராஜர் - தேவியர்கள்.

பொன்னம்பலம் சேரநாட்டு கலைவடிவத்தில் ஓடுகள் வேய்ந்து கூரையுடன் காணப்படுகிறது..

அம்பலத்தில் ஆடவல்லான் ஆடும் ஆனந்த நடனம்.

ஆடவல்லானின் தோற்றம் அப்படியே நாவுக்கரசரின் வார்த்தைகளுக்குப் பொருந்துகிறது.

குனித்தப் புருவம், கொவ்வை செவ்வாய், குமிண் சிரிப்பு, பனித்த சடை, பவள மேனி, பால் வெண் நீறு இனித்தமுடன் எடுத்த பொற்பாதம்..

ஆடவல்லானின் காலடியில், காளியின் சதுரத்தாண்டவம்..

அம்பலத்தின் வாயிலில் அர்ச்சகர்கள்.

எதிரே ஒரு மண்டபம்.
மண்டபத்தில் இராஜராஜர் தன் மூன்று தேவியரோடு நின்று ஆடவல்லானின் ஆட்டத்தை கண்டு பரவசமடைகிறார்.

வாயிலில் இராஜராஜனின் மெய்காப்பாளர்கள்.
கரங்களின் மலர்களுடன் எளிமையானத் தோற்றத்தில் இராஜராஜர்.


மெய்க்காப்பாளர்கள் - சிவாச்சாரியார்கள்.


ஆடவல்லான் என்னும் நடராஜர்.

அவருக்குப்பின்னே அவரது மூன்று
தேவியர்கள். மெல்லிய உடை அணிந்து, கைகளில் வளையல், கழுத்திலும் இடுப்பிலும் முத்துமாலை, கால்களில் தண்டம் அணிந்து உள்ளனர்.
மண்டப வாயிலில் இராஜராஜரின் மெய்க்காவல்ப் படையினர். கழுத்துப் பட்டியுடன் திறந்த சட்டையும் தொடை வரை நீண்ட கால் ஆடையுடன் கையில் ஒரு கம்பு வைத்துள்ளனர்.

இதற்கும் கீழே..
ஆடவல்லானை கரங்கள் கூப்பி வணங்கும் பொதுமக்கள்.

சற்று மேலே .
அமர்ந்த நிலையில் அரச குலப்பெண்கள் இருக்கிறார்கள்.

இவ்வாறாக..
பொன்னம்பலத்தில் ஆடும் இறைவனையும்...
தரிசிக்கும் தம் பேரரசனையும்...
ஒட்டுமொத்த நிகழ்வுகளையும்,
ஓவியமாக வரைந்துள்ள பாங்கு..
ஓவியக்கலையிலும் சோழர்கள் உச்சம் தொட்டனர் என்பதற்கு இவ்வோயியமும் ஒரு சான்றாகும்..
ஓவியத்தின் முழுப்பகுதியையும் பார்வையிடுங்கள்..

பகுதி பகுதியாகப் பிரித்து அடுத்தப்பகுதியில் பார்ப்போம்.

# பேயாழ்வார்

**ஜனக்புரி சீனிவாசன்,**
*தமிழாசிரியர்(ஓய்வு).*



*சீராரும் மாடத் திருக்கோவலூரதனுள்*

*காரார் கருமுகிலைக் காணப்புக்கு- ஓராத்*

*திருக்கண்டேன் என்றுரைத்த சீரான்கழலே*

*உரைக்கண்டாய் நெஞ்சே உவந்து.*

*என பேயாழ்வார் குறித்த தனியனாக குருகைக் காவலப்பன் அருளிச் செய்துள்ளார்.*

*ஐப்பசியில் ஓணம் அவிட்டம் சதயமிவை*

*ஒப்பிலவாம் நாள்கள் உலகத்தீர்- எப்புவியும்*

*பேசுபுகழ் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்*

*தேசுடனே தோன்றும் சிறப்பால் என மணவாள மாமுனிகள் உபதேச ரத்தினமாலையில்(6) முதலாழ்வார்களின் அவதார நட்சத்திரங்கள் குறித்து அருளிச் செய்துள்ளார்.*

*பன்னிரண்டு ஆழ்வார்களில் முதலாழ்வார்கள் எனக்கூறப்படும் பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் முறையே ஐப்பசித்திங்கள் திருவோணம் ,அவிட்டம், சதயம் என அடுத்தடுத்த நட்சத்திரங்களில் அவதரித்ததாகக் குறிப்பிடுகிறார்.*

*மற்றைய ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த பெற்றிமையோர் என்று முதலாழ்வார்கள்அழைக்கப்படுவதாகத் தெளிவுபடுத்துகிறார்.*

*மூவருமே அயோநிஜர்கள். ஒரு தாயின் வயிற்றில் பிறவாதவர்கள்.*

*இறைவனை நம் முயற்சியால் காண முடியும் அவனை அடைய முடியும் என்னும் பேதமை நீங்கி அவனருளால் அவன்தாள் வணங்கி அவனாலேயே மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள்.*

*"காட்டித் தன் கனைகழல்கள்*

*கடுநரகம் புகல் ஒழித்த"*

என வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன் அருளியது போல , நமது அறிவைத் தூண்டி உலகோர்க்கு விழிப்புணர்வை ஏற்படுத்த ஆழ்வார்களையும் விண்ணின்று மண்ணிற்கு அனுப்பிவைத்தான் எம்பெருமான் என்பர்.

நித்யசூரிகளே ஆழ்வார்களாக அவதரித்தனர் என்பர். மண்ணுக்கும் பொன்னுக்கும் மயங்காதவர்களாய், திருமால் வழிபாட்டிலேயே ஆழங்கால் பட்டவராய் , திருமால்நெறி பரப்பித் தாம் எங்கிருந்து வந்தோமோ அந்த இடத்தின் பண்புகளை, மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்,தக்க நெறியும் , எம்பெருமானை அடையவொட்டாமல் தடுக்கும் தடைகளையும் விளக்கி, எம்பெருமானை அடைவதே வீடுபேறு எனும் சிறந்த வைணவ நெறியாக அர்த்த பஞ்சக ஞானத்தை (ஐந்து மெய்யுணர்வு நிலையினைக்) காட்டிச் சென்றனர்.



தொண்டைநாடு சான்றோருடைத்து எனக் கூறப்படும் தொண்டைநாட்டில் தேனமர் சோலை மாடமாயிலைத் திருவல்லிக்கேணியில் ஒருகிணற்றில் அல்லிப்பூவொன்றில் ஐப்பசித் திங்கள் சதய நட்சரத்தில் அவதரித்தவர். திருமாலின் ஐந்து ஆயுதங்களில் ஒன்றான நாந்தகம் எனப்படும் வாளின் குறியீடாக இவரைக் கருதுவர் பெரியோர்.

அடுத்தடுத்த நாள்களில் வெவ்வேறிடங்களில் அவதரித்த முதலாழ்வார்கள் மூவரும் திருமாலிடத்தில் அளவிலா பக்தியுடையவராக அவனைக் காணவேண்டி ஊர்ஊராகச் சென்று கொண்டிருக்கையில், இறைவன் அம்மூவரையும் ஓரிடத்தில் ஒன்று சேர்த்து ஆட்கொள்ள வேண்டிக் கருதினார் போலும்.

ஒருநாள் இம்மூவரும் ஒருவரை ஒருவர் அறியாதவராய் திருக்கோவலூர் நகரில் நுழைந்தனர். தீடீரென கடுமழை பெய்தது இரவு நேரம்.

மழைக்கு ஒதுங்க இடம் தேடினர். மிருகண்டு முனிவர் குடிலை ஒவ்வொருவராக அடைந்தனர். ஒருவர் படுக்கவும் இருவர் அமரவும் மூவர் நிற்கக் கூடியதான இடம். முதலில் பொய்கையார் முனிவர்தம் குடில் தாளினைத் தட்டினார். கதவு திறக்கப்பட்டது. முனிவர் இடைகழியைக் காட்டித் தங்கச் செய்தார்.

சற்று நேரத்திற்கெல்லாம் மீண்டும் கதவு தட்டும் ஒலி கேட்க இரண்டாமவர் நிற்பதைக்கண்டு ஒருவர் படுக்கலாம் இருவர் அமரலாம் எனக்கூறி உள்ளே அனுமதித்தார். இன்னும் சிறிது நேரத்தில் மூன்றாவதாக ஒருவர் கதவைத் தட்ட ஒருவர் படுக்க இருவர் அமர மூவர் நிற்கலாமெனக் கூறி அவரையும் சேர்த்துக் கொண்டனர் இருவரும்.

பொய்கையார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் ஆகிய மூவரும் நின்றபடியே மழையையும் பொருட்படுத்தாமல் வாட்டும் குளிரையும் மனங் கொள்ளாமல் எம்பெருமானின் பெருமையைப் பேசிக் களித்திருக்க, இதுதான் சமயமென்று எம்பெருமான் தன் திருவருளைப் பொழிய விரும்பி அவர்கள் அறியாவண்ணம் அவ்விடைகழியில் நுழைந்து அவர்களை நெருக்க ,

இருட்டின் மிகுதியால் புதிய நெருக்கத்தின் காரணம் புலப்படாமல் அவ்விருளைப் போக்க பொய்கையாழ்வார்

வையம் தகளியா வார்கடலே நெய்யாக

வெய்யகதிரோன் விளக்காக- செய்ய

சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை

இடராழி நீங்குகவே என்று"

இந்த உலகத்தையே அகலாகவும் கடலையே அதில் வார்க்கும் நெய்யாகவும், வெப்பமிக்க சூரியனையே விளக்கின்சுடராகவும் ஏற்றிப்பாடி எம்பெருமானைத் துதித்தார்.

அடுத்து பூதத்தாழ்வார்,

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக

இன்புருகு சிந்தை இடுதிரியா- நன்புருகி

ஞானச் சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு

ஞானத் தமிழ்புரிந்த நான்"

என எம்பெருமானிடத்துத் தான் கொண்டிருந்த அன்பையே அகலாகவும் ஆர்வத்தையே நெய்யாகவும் , தன் சிந்தையையே திரியாகவும் இட்டு ஞானவிளக்கேற்றி ஞானத்தமிழ் நூறு பாசுரங்கள்பாடி பரவசமெய்தினார்.

இவ்விருவர் ஏற்றிய விளக்கொளியில் மூன்றாமவரான பேயாழ்வார்,

திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்

அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்

பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்

என்னாழி வண்ணன்பால் இன்று" என நெருக்கத்தின் காரணமாக இருக்கும் திருவுடன் கூடிய எம்பெருமானையும் அவருடைய பொன்னிற மேனியையும், அவர் திருக் கரங்களில் தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழியினையும் , வெள்ளை விளி சங்கினையும் தான் கண்டு கொண்டதாகத் தொடங்கி நூறுபாசுரங்கள் பாடி பரவசமெய்தலானார்.

இம்மூவர் பாசுரங்களும் முறையேமுதல் திருவந்தாதி, இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந் திருவந்தாதி என வழங்கப் படுகிறது.பிற்காலத்தில் தோன்றிய அந்தாதி சிற்றிலக்கிய வகைக்கு முன்னோடிகளாக இவ் ஆழ்வார்கள் திகழ்ந்தனர் எனக் கூறின் மிகையாகாது.

நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்

பாயும் பனிமறைத்த பண்பாளர்- வாசல்

கடைகழியா உள்புகாக் காமர் பூங்கோவல்

இடைகழியே பற்றி இனி"

என்னும் தனிப்பாடல் ஒன்றும் சான்றுபகர்கிறது.

பின்னர் மூவரும் பற்பல திருத்தலங்களுக்குச் சென்று எம்பெருமானைப் பாடிப் பரவி முடிவில் திருவல்லிக்கேணியில் நெடுங்காலம் வாழ்ந்து வைணவத்தைப் பரப்பியதாகக் கூறுவர்.

முதலாழ்வார்கள் மூவர் பாடல்களையும் தனித்தனியே நோக்கினாலும் பாடல் வரிகளில் வேற்றுமை அதிகம் காணமுடியாது. ஓசை நயத்திலும் , கருத்தொருமையிலும், சொல்லாட்சித் திறத்திலும் , நடையமைப்பிலும் ஒற்றுமைகள் காணலாம்.

பேயாழ்வார் எம்பெருமான் தனக்கு உவமை இல்லாதவன் என்பதை மறுத்துத் தனக்கு உவமை தானே என்கிறார்.

“ தானே தனக்குவமம் தன்னுருவே எவ்வுருவும்

தானே தவவுருவும் தாரகையும் தானே

எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்து

இருசுடருமாய் இறை" என்கிறார்.

ஆழ்வார் தாம் சென்று சேவித்த திருத்தலங்களைப் பாசுரங்களில் குறிப்பிடுகின்றார்.

“விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்

மண்ணகரம் மாமாட வேளுக்கை -மண்ணகத்த

தென்குடங்கை நீரேற்றான் தாழ்வு” .( மூ. திரு.62)

"வண்டு வளங்கிளரும் நீள் சொலை வண்பூங்கடிகை

இளங்குமரன்தன் விண்ணகர்"

" வந்துதைத்த வெண்டிரைகள் செம்பவள முத்தம்

அந்தி விளக்கும் அணிவிளக்காம்-எந்தை

ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்வன்

திருவல்லிக் கேணியான் சென்று"

திருவரங்கம் , திருக்குடந்தை, திருவிண்ணகர், திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர், அட்டபுயகரம், திருவேளுக்கை, திருப்பாடகம், திருவெஃகா, திருவல்லிக் கேணி, திருக்கடிகை, திருவேங்கடம் திருப்பாற்கடல் ,பரமபதம், என்னும் பதினான்கு திருத் தலங்களை மங்களாசாசனம் செய்துள்ளார்.

"சென்றநாள் செல்லாத செங்கண்மால் எங்கள்மால்
என்றநாள் எந்நாளும் நாளாகும் "

என நிகழ்கால நிலை நன்றாக இருப்பதால் இறந்தகால எதிர்கால நிலைமைகளில் கவலையற்று எல்லாக் காலமும் தனக்கு நல்ல காலமே என்கிறார்.

இவருடைய பாசுரங்களில் பக்திச் செறிவு மட்டுமன்றி கற்பனைத் திறன், கவித்திறன்,சொல்லாட்சி, இயற்கை வருணனைத்திறன், அணிநயங்கள் முதலான தமிழின்பங்களை உய்த்துணரலாம்.

ஞானத் தமிழ் மட்டுமல்லாமல் பாலேய்த் தமிழாகவும் பாசுரங்கள் விளங்குவதைப் படித்து இன்புறுவோமாக!

# தமிழர் திருநாளே பொங்கல் திருநாள்..!

**இலக்குவனார் திருவள்ளுவன்**



பொங்கல் கொண்டாட்டம் குறித்த தொன்மையான குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை. எனினும் பொங்கல் தொடர்பான குறிப்புகளைக் காணலாம். தைப் பொங்கலன்று ஆற்றில் குளித்து மகிழ்வதைத் தைந்நீராடல் என்பர். கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன் இயற்றப்பெற்ற பரிபாடல் இலக்கியத்தில் நன்னாகனார் இசையில் ஆசிரியன் நல்லந்துவனார் எழுதிய பாடலில் தைந்நீராடல் குறிக்கப் பெறுகிறது.

*தாய் அருகா நின்று தவ தைந் நீராடுதல் – பரிபாடல் 11/91*

*நீ தக்காய் தைந் நீர் நிறம் தெளிந்தாய் என்மாரும் – பரிபாடல் 11/115*

*இன்ன பண்பின் நின் தைந் நீராடல் – பரிபாடல் 11/134*

*தைந்நீராடுவதை உவமை போல் கபிலர், கலித்தொகையில்(59)*

*தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ?*

*எனக் கேட்கிறார்.*

*ஆண்டின் இறுதி நாளான மார்கழித் திங்கள் இறுதி நாளன்று – பொங்கலுக்கு முதல் நாள் – கொண்டாடுவது போகி. புதியனவற்றை வரவேற்பதற்காகப் பழையனவற்றைப் போக்கும் நாள் 'போக்கி. 'போக்கி' என்பதே சுருங்கிப் போகியாயிற்று. பழைய பொருள்களை மட்டுமல், பழைய கசப்பான எண்ணங்களையும் பகை உணர்வுகளையும் எறிவதற்கான நாள் இது.*

*தை முதல் நாள் கொண்டாடுவதே தைப்பொங்கல். இதனை மணப்பொங்கல் என்பர். மாரியம்மன் கோயிலில் பொங்கல் வைத்து வழிபடுவதைக் காண்கிறோம். இவ்வாறான பல்வேறு நாள் பொங்கலுடன் வேறுபடுத்திச் சிறப்பிக்க இவ்வாறு கூறுகின்றனர்.*

*நாட்டின் சில பகுதிகளில் முப்போகமும் சில பகுதிகளில் இருபோகமும் இருக்கும். ஆனால், எல்லாப்பகுதிகளிலும் ஒரு போகம் இருக்கும். அதன் அறுவடைதான் தையில் நடைபெறுகிறது. எனவேதான் தைத்திங்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இடையில் ஏற்பட்ட பொருள் பற்றாக்குறை தொடர்பான இன்னல்கள் நீங்கி மகிழ்வு தொடங்கும் காலம் என்பதால்*

மகிழ்ச்சியாகக் கொண்டாடுகின்றனர். எனவேதான் “தை பிறந்தால் வழி பிறக்கும்” என்கின்றனர். இதற்குச் சமயப் பரப்புரையாளர்கள் – அறுவடைக்குப்பின்னர் வயலில் நடக்க வழி பிறக்கும் எனத் – தரும் விளக்கம் சரியில்லை.

மாட்டுப் பொங்கலுக்கு மறுநாள் காண்பொங்கல் அல்லது காணும் பொங்கல். ஒருவரை ஒருவர் சந்தித்து நலம் உசாவி வாழ்த்துகளைப் பரிமாறிக் கொள்வர். பணியாளர்கள் தங்கள் முதலாளிகளைச் சந்தித்துப் பரிசுகள் பெறுவர். சிலர் இதனைத் தவறாகக் கன்றுப் பொங்கல் என்கின்றனர். மாட்டுப்பொங்கல் கொண்டாடப்படுவதால் தனியாகக் கன்றுப் பொங்கல் எனக் கொண்டாடும் தேவை இல்லை அல்லவா?



மாட்டுப்பொங்கல் மறுநாளன்று – காணும் பொங்கல் நாளில் – கன்னிப்பொங்கல்/ கன்னிமார்பொங்கல்/ கனுப் பொங்கல்/ பூப்பொங்கல் என என வெவ்வேறு பெயர்களில் கொண்டாடுவர். இதனைத் தை முதல் நாளன்று பொங்கலின் பொழுதும் சில பகுதிகளில் கொண்டாடுவர் அல்லது மறுநாளோ தைத்திங்களில் பிறிதொருநாள் விளையாடியோ கொண்டாடுவர். சிறுமியர் குப்பி எரு எனப்படும் எருவைக்கொண்டு பொங்கல் சமைத்து விளையாடுவதால் இதனைக் குப்பிப் பொங்கல் / கொப்பிப்பொங்கல் / குப்பிராட்டிப்பொங்கல் என்றும் கூறுவர். மணல் வீடுகட்டி அல்லது பொம்மை வீட்டில் சிறுமியர் பொங்கல் வைப்பதால் சிறுவீட்டுப்பொங்கல் எனவும் சொல்வர்.

சலவையாளர்கள் துணி துவைக்கும் துறைகளில் நடத்தும் பொங்கலைத் துறைப்பொங்கல் என்கின்றனர். திருமணமான நான்காம் நாள் தாய்மாமன் செலவில் மணமகளுக்கு மட்டும் ஊர்வலம் நடத்திப் பொங்கல் இடுவதைத் தோழிப் பொங்கல் என்கின்றனர்.

மாட்டுச்சந்தையில் இடும் பொங்கலைப் பட்டிப்பொங்கல் என்கின்றனர். பொங்கலன்று மிகுதியாகப் பொங்கினால் மங்கல அறிகுறியாக எண்ணி நிறைப்பொங்கல் என்பர். சிற்றூர்த் தேவதைக்கு ஊரார் இடும் பொங்கல் பெரும்பொங்கல் எனப்படும்.

பொங்கலன்று பெற்றோர் பெண்ணுக்குத் தரும் பரிசும் பெரியோர்க்குச் செலுத்தும் காணிக்கையும் பொங்கல் வரிசை எனப்படுகிறது.

சிறப்பாகக் கொண்டாடப்படும் பொங்கல் ஏதும் மதச் சார்புடையதா?

இசுலாம் மதம் தோன்றும் முன்னரே, அதற்கு முன்பிருந்த கிறித்துவ மதம் தோன்றும் முன்னரே கொண்டாடப்படுவது பொங்கல் விழா. எனவே, இந்த மதங்களைச் சார்ந்தது அல்ல அது.

அப்படியானால் இந்து மதவிழா என்று சொல்லலாமா?

இறை நெறியும் மத நெறியும் ஒன்றல்ல. எனவேதான், இறையன்பர் அருட்திரு இராமலிங்க வள்ளலார்,

மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும் என்றார்.

தமிழர்களின் இறைநெறி என்பது இயற்கை சார்ந்தது.

இந்து மதம் என்ற ஒன்று உருவாகும் முன்னர் இருந்தே சிறந்திருக்கும் இயற்கை சார்ந்த பொங்கல் விழாவை எங்ஙனம் இந்துமதப்பண்டிகை எனக் கூற இயலும்?

பரந்து இருக்கும் கடலோரம் வாழும் மக்கள் பரதவர் எனப்பட்டனர். பெரும்பகுதி கடலால் சூழ்ந்த நம் நாடு பரதக் கண்டம் எனப்பட்டது. ஆங்கிலேயர் வந்த பின் வந்த பெயரே இந்தியா என்பது. அதுபோல் நம் நாட்டில் இருந்த சமயங்களைச் சேர்த்து இந்து மதம் என்றனர். அவ்வாறு சொல்லும் பொழுது பெரும்பகுதி ஆரியக் கருத்துகளும் ஆரியக் கதைகளும் திணிக்கப்பட்டன. அவ்வாறு திணிக்கப்பட்ட ஆரியம் மக்களை நான்கு வகையாகப் பிரித்தது. அதில் உழுபவன் சூத்திரன் எனப்பட்டுக் கடை நிலையில் வைக்கப்பட்டான். அவன் உயர்வுகளும் சிறப்புகளும் மறுக்கப்பட்டன.

இவற்றுக்குக் காரணமான ஆரிய வேதங்கள் பயிர்த்தொழிலையும் பயிர்த்தொழிலாளர்களையும் இழிவு படுத்துவன.

ஆனால், தமிழர்களின் பொங்கல் விழா என்பது உழுதொழிலையும் உழவர்களையும் போற்றும் பெருநெறி விழா. அவ்வாறிருக்க இதனை இந்து மத விழா என்பது எப்படிச் சரியாகும்?

"பிராமணர், சத்திரியர் உழவுத் தொழில் செய்யலாகாது... ... பூமியையும் பூமியில் வாழும் சிற்றுயிர்களையும் கலப்பை, மண்வெட்டியால் கொல்ல நேர்கிறது"

என்கிறது மநு *(11.52)* இதையேதான் வேளாண்மை முதலிய கடமைகளில் இம்சை முதலான குறைகள் காணப்படுகின்றன எனக் கீதையும் கூறுகிறது. வேள்வியில் உயிர்களைக் கொல்பவர்கள்தாம் இங்ஙனம் கூறுகிறார்கள்.

இவ்வாறு உழுதொழிலை இழிவாகவும் அத் தொழிலைச் செய்பவனைச் சூத்திரன் எனக் கூறி இழிவானவனாகவும் ஆரிய நூல்கள் கூறுகின்றன. அத்தகைய இழிவானவன் பெயரில் அவர்கள் விழா எடுப்பார்களா? ஆனால், தமிழர்கள் உழவையும் உழவர்களையும் உயர்வாக மதித்தார்கள். எனவேதான் தெய்வப்புலவர் திருவள்ளுவர்,

"உழந்தும் உழவே தலை", "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என உழவே தலைமையான தொழில் என்றார். உழவர்களைத் தொழுதே மற்றவர்கள் செல்கின்றனர் என்றார்.

இவ்வாறு உழவர்களை மதிக்கும் தமிழ் மக்கள் உழவர் திருநாள் என்று கொண்டாடுகின்றனர். உழவை மதிக்கும் தமிழின விழாவை உழவை மதிக்காத இந்து மத விழாவாக எங்ஙனம் கூற முடியும்? மதத்தோற்றங்களுக்கு முன்பிருந்தே கொண்டாடப்படும் இன விழாவே பொங்கல் விழா என்பதை உணர வேண்டும்.

கடந்த நூற்றாண்டில், தேசியக் கட்சிகளில் இருந்த தமிழ் உணர்வாளர்களாலும் திராவிட உணர்வாளர்கள், தமிழ் உணர்வாளர்களாலும் பொங்கல் விழா கொண்டாடுவது ஓர் எழுச்சியாக மாறியது.



சமய வேறுபாடின்றி அனைத்துத் தரப்பாரும் பொங்கல் விழாவைக் கொண்டாடினர். தனித்தனிக் குடும்ப விழாவாக இலலாமல், மன்பதை விழாவாகத் தமிழ் அமைப்பினரும் பிற அமைப்பினரும் கொண்டாடத் தொடங்கினர். அதற்கு முன்பு சிற்றூர்களில் சல்லிக்கட்டு, காணும் பொங்கல் போன்றவற்றால் ஊர் விழாவாக இருந்த பொங்கல் விழா நகர விழாவாகவும் மாறியது.

எல்லாச் சமயத்தவராலும் தமிழின விழாவாகக் கொண்டாடப்பட்டுச் சிறப்பெய்திய பொங்கல் விழா மெல்ல மெல்ல இந்துக்கள் தவிர பிற சமயத்தவரால் கடவுள் நம்பிக்கை அடிப்படையில் புறக்கணிக்கப்படலாயிற்று. இந்துக் கடவுளுக்குப் படைத்த பொங்கலைத் தாங்கள் உண்பதா என்றும் ஒரே இறை வழிபாட்டில் நம்பிக்கை கொண்ட நாம் பிற சமயக் கடவுளுக்குப் படைத்த பொங்கலை ஏற்பதா என்றும் எண்ணத் தொடங்கி விட்டனர்.



இலக்கிய அமைப்புகள் மூலம் தமிழ்த்தொண்டாற்றிவரும் பிற சமயத்தவர், சிறப்பாகப் பொங்கல் விழாவை உணர்வுடன்தான் கொண்டாடுகின்றனர். கட்சி அமைப்பினர் கொண்டாடும் பொதுவிழாவாகிய தமிழர் திருநாளிலும் சமய வேறுபாடின்றிக் கலந்து கொள்கின்றனர். ஆனால், குடும்பம் என்று வரும் பொழுது வேறு நிலை எடுக்கின்றனர். இந்துக் கோயில்களில் பொங்கலை முன்னிட்டு வழிபாடுகளும் சிறப்புப் பூசைகளும் நடை பெற்று வருகின்றன.

இதனால் இந்து விழாவாக இப்பொழுது கருதப்படும் நிலை வந்து விட்டது.

மணிமேகலையில் 10 மதவாதிகள் பற்றிய குறிப்பு வருகிறது. அதில் இந்து மதம் இல்லை. இந்து மதம் என்பதே பிற்காலத்திய கூட்டாக்கம்தான்.

இந்து மதம் இல்லாக் காலத்திலிருந்தே தமிழர் விழாவாக இருந்து வரும் பொங்கல் விழாவை மத விழாவாகக் கருதுவது தவறு என்பதை அனைவரும் உணர வேண்டும். தாங்கள் தமிழர்கள் என்பதை மறவாது தமிழ் நாட்டவரும் உலகத் தமிழர்களும் தமிழர் திருநாளைக் கொண்டாட வேண்டும்.

எனவே, இந்து என்ற பெயர் சூட்டலுக்கு உள்ளானவர்களும் பிற சமயம் சார்ந்த தமிழ் நாட்டினரும் பொங்கல் விழாவை இனவிழாவாகவும் பொது விழாவாகவும் பண்பாட்டு ஒற்றுமைக்கும் சமய நல்லிணத்திற்கும் ஏற்ற விழாவாகவும் கருதிச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும்.

*தொடர்- 2*

# தவறின்றித் தமிழ் எழுதுவோம்



***டாக்டர் புதேரி தானப்பன்***
*தலைவர், திருக்குறள் பாராயணம், புது தில்லி.*
*தலைவர், தில்லித் தமிழ் வளர்ச்சிக் கழகம், புது தில்லி.*

***புணர்ச்சி:***

*உயிரையும் மெய்யையும் ஈறாகவும் முதலாகவும் கொண்ட சொற்கள் தன்னொடு தானும் பிறிதொடு பிறிதுமாய் இணைந்து ஒரே சொற்றொடராகும் நிலையைப் புணர்ச்சி என்பர். முதலில் நிற்கும் சொல் நிலைமொழி எனப்படும். அதனுடன் வந்து இணையும் சொல் வருமொழி எனப்படும். நிலைமொழி, வருமொழி இவற்றின் ஈற்றிலும் முதலிலும் வருகின்ற எழுத்துகளின் அடிப்படையில் புணர்ச்சி விதிகளையும் விதிவிலக்குகளையும் நமது முன்னோர் வகுத்துள்ளனர்.*

*சொற்களின் அடிப்படையில் நிலைமொழியும் வருமொழியும் இணைந்து ஒரு சொற்றொடராக மாறுவதைக் கவனித்துப் பார்க்கலாம்.*

***பெயர்+பெயர்***
*வெள்ளை + புறா = வெள்ளைப்புறா*
*மல்லிகை + பூ = மல்லிகைப்பூ*
*மரம் + குதிரை = மரக்குதிரை*
*ஆறு + குளம் = ஆறுகுளம்*
*பணம் + பை = பணப்பை*
*பட்டு + கன்னம் = பட்டுக்கன்னம்*

*பெயரும் பெயரும் இணையும்போது அது ஏதேனும் ஒரு தொகையாக மாறும்.*

*வெள்ளை, மல்லிகை, மரம், பணம், பட்டு ஆகியவை யாவும் பெயர்ச் சொற்கள்.*

*புறா, பூ, குதிரை, குளம், பை, கன்னம் ஆகியவையும் பெயர்ச் சொற்கள். பெயர்ச் சொற்களும் பெயர்ச் சொற்களும் இணைந்து தொகைச் சொற்களாக மாறின.*

***வினை + வினை***
*உண்டான் + மகிழ்ந்தான் = உண்டு மகிழ்ந்தான்.*
*பார்த்தாள் + பேசினாள் = பார்த்துப்பேசினாள்*
*எடு + கொடு = எடுத்துக்கொடு*
*பார் + பேசு = பார்த்துப்பேசு*

*வினையும் வினையும் இணையும்போது நிலைமொழி வினை, வினையெச்சமாக மாறும்.*

*உண்டு, பார்த்து, எடுத்து ஆகியவை வினையெச்சச் சொற்கள்.*

**பெயர் + வினை**

*தனிப் பெயருடன் (தொகையல்லாத பெயர்) வினை இணையாது.*

*உயிரீற்றுப் பெயருடன் உயிர்முதல் வினை வந்தால் உடம்படு மெய்யுடன் இணையும்.*

*மாதவி + ஆடினாள் = மாதவியாடினாள்.*

*வேண்டுமாயின் கண்ணன் + உண்டான் என்பதைக் கண்ணனுண்டான் என எழுதலாம். அது பண்டித நடையாகும்.*

*மாதவி என்பது உயரீற்றுப் பெயர்ச் சொல். ஆடினாள் என்பது வினைச்சொல்.*



**வினை+பெயர்**

*கொல்+யானை=கொல்யானை*

*கடி+நாய்=கடிநாய்*

*ஏவல்வினையுடன் பெயர் இணையும்போது அது வினைத்தொகை ஆகலாம்.*

*கொல் என்பதும் கடி என்பதும் ஏவல் வினை ஆகும். யானை என்பதும் நாய் என்பதும் பெயர்ச் சொற்கள்.*

*வினைமுற்றின் பின் பெயரை இணைத்து எழுதுவது தமிழ் நடை அல்ல; அதனைச் செய்யுள் வழக்கு எனலாம்.*

*வந்தான் கண்ணன்.*

*ஆடினாள் மங்கை .*

*வந்தான், ஆடினாள் என்பவை வினைமுற்றுகள்.*

*இக்கருத்துகளின் அடிப்படையிலேயே*

*தன்னொடு தான் புணரும் இடங்களில் மட்டுமே ஒற்றுமிகும், தன்னொடு பிறிது புணருமிடத்தில் ஒற்று மிகாது எனும் கருத்து முன்வைக்கப்பட்டது.*



***இயல்பு புணர்ச்சி: (வலி மிகா இடங்கள்)***

*1) எழுவாய்த் தொடரில் வலி மிகாது.*

*மழை + பெய்தது = மழை பெய்தது*

*என்று இயல்பாகவே புணரும் . ஏனெனில் இது ஓர் எழுவாய்த் தொடராகும். எழுவாய்த் தொடாில் வலி மிகாது . வேற்றுமை உருபு ஏற்காமல் வருவது எழுவாய்த் தொடராகும் .*

*2) பெயரெச்சத்தில் வலி மிகாது*

*திரிந்த+ காலம் = திரிந்த காலம்*

என்று இயல்பாகவே புணரும் . பெயரெச்சத்தில் வலி மிகாது . திாிந்த காலம் பெயரெச்சமாதலால் வலி மிகவில்லை .

3) மென்றொடர்க் குற்றியலுகர ஈற்று வினையெச்சத்தின் பின் வலி மிகாது .

கண்டு + திரும்பினான் = கண்டு திரும்பினான் .

கண்டு -- மென்றொடர்க் குற்றியலுகர ஈறு உள்ள எச்ச வினை .

4) வினைத்தொகையில் வலி மிகாது .

நிறை + குடம் = நிறை குடம் .

நிறைகுடம் வினைத்தொகையாகும். வினைத்தொகை காலம் காட்டாது. எனினும் இதை நிறைந்த குடம் , நிறைகின்ற குடம் , நிறையும் குடம் என்று முக்காலத்திற்கும் விாிக்கலாம்.

5) இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வலி மிகாது. தொக்கி நிற்பது தொகை. தொக்கி என்றால் மறைந்து என்று பொருள்.

வீடு + கட்டினான் = வீடு கட்டினான் .

ஒற்று மிகாது . ஏனெனில் இதில் இரண்டாம் வேற்றுமை உருபு தொக்கி உள்ளது . விாியவில்லை . ஆனால் இரண்டாம் வேற்றுமை உருபான 'ஐ' என்பது விரிந்து, வீட்டை + கட்டினான் என்று வந்தால் அங்கே ஒற்று மிகுந்து, வீட்டைக் கட்டினான் என்று வரும்.

6) உகர ஈற்று வினையெச்சத்தின் பின் வலி மிகாது .

செய்து + பார் = செய்து பார். இங்கே வலி மிகவில்லை. செய்து என்னும் சொல்லில் உள்ள 'து' என்பது த் + உ = ஆகும். எனவே 'து' என்பது உகர ஈறு ஆகும். செய்து என்னும் சொல் வினை எச்சம் ஆகும். ஒரு சொல் முடியாமல் நிற்பது எச்சம் எனப்படும்.

7) நிலைமொழி ஈறு கெடவில்லையெனில் வலி மிகாது.

பாடாத + பைங்கிளி = பாடாத பைங்கிளி

நிலைமொழி ஈறு கெடவில்லை . அதனால் இங்கே ஒற்று மிகாது. பாடாத என்பதற்கு மாறாகப் பாடா என்று வந்தால் அது ஈறு கெட்டது ஆகும். ஏனென்றால் பாடாத என்னும் சொல்லில் உள்ள ஈற்றெழுத்து, அதாவது, கடைசி எழுத்து கெட்டு விட்டது; அழிந்து விட்டது; நீங்கி விட்டது; வராமல் போய்விட்டது என்று பொருள்.

*8) அது, இது ,உது ஆகிய சுட்டுப் பெயர்களுக்குப்பின் வலி மிகாது .*

*அது + பறவை = அது பறவை .*

*இது + வீடு = இது வீடு*

*9) மென்றொடர்க் குற்றியலுகரத்தின் முன் வினைச்சொல் வந்தால் ஒற்று மிகாது .*

*குரங்கு + பாாத்தது = குரங்கு பார்த்தது .*

*10) உயர்திணையில் ஒற்று மிகாது.*

*மகளிர் + குழு = மகளிர் குழு*

*ஒற்று மிகாது . மகளிர் உயர்திணை . எனவே ஒற்று மிகாது .*

*11) விளி வேற்றுமையில் ஒற்று மிகாது .*

*மகனே + கேள் = மகனே கேள் .*

*ஒற்று மிகாது . எட்டாம் வேற்றுமையான விளி வேற்றுமையில் ஒற்று மிகாது .*



*12) உம்மைத் தொகையில் ஒற்று மிகாது.*

*வெற்றிலை + பாக்கு = வெற்றிலை பாக்கு*

*இது இயல்பாகவே புணரும். ஏனெனில் வெற்றிலை பாக்கு என்பது உம்மைத்தொகை. இதை வெற்றிலையும் பாக்கும் என்று விரிக்கலாம்.*

*13) வன்தொடர் ஒழிந்த ஏனைய குற்றியலுகரங்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.*

ஆறு + தலை = ஆறு தலை.

விறகு + பெரிது = விறகு பெரிது.

எஃகு + சிறிது = எஃகு சிறிது.

பந்து + தந்தான் = பந்து தந்தான்.

செய்து + போனான் = செய்து போனான்.

14) சுட்டுப் பெயர்களுடன் புணரும் வல்லினம் மிகா.

அது+ காண் = அது காண்.

இது + காண் = இது காண்.

15) வினாப் பெயர்களுடன் புணரும் வல்லினம் மிகா.

எது + படித்தாய் = எது படித்தாய்.

ஏன் + கண்டாய் = ஏன் கண்டாய்

யார் + சென்றது = யார் சென்றது

16) முதல் வேற்றுமையில் புணர்ந்து நிற்கும் வல்லினம் மிகா.

புலி+ பார்த்தது= புலி பார்த்தது.

புலி என்பது எழுவாய்த் தொடர். இது முதல் வேற்றுமை.

17) மூன்றாம் வேற்றுமை விரியில் வல்லினம் மிகாது.

என்னோடு + வந்த = என்னோடு வந்த. ஆல், ஆன், ஒடு, ஓடு ஆகியவை மூன்றாம் வேற்றுமை உருபுகள் ஆகும்.

18) ஆறாம் வேற்றுமை விரியில் வல்லினம் மிகாது.

எனது + கை = எனது கை. ஆறாம் வேற்றுமை உருபு: அது.

19) விளித் தொடர்களில் புணரும்போது வல்லினம் மிகாது.

தம்பி + கேள் = தம்பி கேள். ஏழாம் வேற்றுமை: விளி வேற்றுமை. விளித்தல் = அழைத்தல், கூப்பிடுதல்.

20) பெயரெச்சத்துடன் புணரும்போது வல்லினம் மிகாது.

பார்த்த + குதிரை = பார்த்த குதிரை. பெயரைக் கொண்டு முடிவது பெயரெச்சம். குதிரை - பெயர்ச்சொல்.

21) படி என்று முடியும் வினையெச்சங்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.

சொன்னபடி + செய்தான் = சொன்னபடி செய்தான். வினையைக் கொண்டு முடிவது வினையெச்சம். செய்தான் - வினைச்சொல். வினை = தொழில்.

22) அகர ஈற்று வினை முற்றுக்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.

ஒடிந்தன + சிறகுகள் = ஒடிந்தன சிறகுகள். ஒடிந்தன - அகரத்தை ஈற்றில் உடைய சொல்.

23) வியங்கோள் வினை முற்றுக்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.

வாழ்க + தமிழகம் = வாழ்க தமிழகம். வாழ்க - வியங்கோள் வினை முற்று.

24) அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு என்னும் சொற்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.

அவ்வளவு + கொடுத்தாய் = அவ்வளவு கொடுத்தாய்.

இவ்வளவு + பாடல்களா = இவ்வளவு பாடல்களா?

எவ்வளவு + சோறு = எவ்வளவு சோறு.

25) ஆ, ஓ, ஏ என்னும் ஈறுகளையுடைய வினாப் பெயர்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.

அவனா + தந்தான் = அவனா தந்தான்?

இவனோ+ செய்தான் = இவனோ செய்தான்?

அவனே + கண்டான் = அவனே கண்டான்.

அவனா, இவனோ, அவனே ஆகியவை ஆ, ஓ, ஏ என்னும் ஈறுகளை உடைய வினாப் பெயர்கள்.

26) எண்ணுப் பெயர்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.

ஒன்று + கொடு = ஒன்று கொடு.

இரண்டு + குரங்குகள் = இரண்டு குரங்குகள்.

மூன்று+ பொம்மைகள் = மூன்று பொம்மைகள்.

27) அகர ஈற்று அஃறிணைப் பன்மைப் பெயருடன் புணரும்போது வல்லினம் மிகாது.

சில + குதிரைகள் = சில குதிரைகள்.

*பல + தலைகள் = பல தலைகள்.*
*சில, பல என்பவை அகர ஈற்றுச் சொற்கள். குதிரைகள், தலைகள் என்பவை அஃறிணைப் பன்மைப் பெயர்கள்.*

*(முனைவர் இராஜகோபால் அவர்கள், தான் முகநூலில் படித்ததை எனக்கு அனுப்பி வைத்தார். அதனை அப்படியே உங்கள் பார்வைக்கு வைக்கிறேன்.)*

*'வலி' மிகும்! (ஓர் உரையாடல்)*

*வலி (வல்லொற்று) மிகும் இடங்கள், மிகா இடங்கள் குறித்த ஐயப்பாடுகள் பலருக்கும் உண்டு. இலக்கண விதிகளைக் கரைத்துக்குடித்த பேராசிரியர்கள் தவிர பலருக்கும் (ஆசிரியர்கள் உட்பட) ஐயம்தான். இதற்கான விதிகள் சுருக்கமாகவும் தெளிவாகவும் இல்லாததே காரணம் எனலாம்.*

*இனி, ஆசிரியர்-மாணவர் இடையேயான ஓர் உரையாடல்:*

*ஆ: வினையெச்சத்தின் பின் வல்லொற்று மிகும்..... எடுத்துக்காட்டு 'கடித்துத்தின்றான்'.*

*மா: அப்படியானால் 'இடிந்துப்போனது' என்று எழுதுவதில்லையே.. இடிந்துபோனது என்றுதானே எழுதுகிறோம்.*

*ஆ: வினையெச்சம் மென்தொடர் குற்றியலுகரமானால் மிகாது.*

*மா: அங்குச்சென்றான், ஈண்டுப் போகிறோம் என்பனவற்றில் அங்கு, ஈண்டு மென்தொடர் குற்றியலுகரம் தானே. மிகுகிறதே?*

*ஆ: அவை 'வினையடைகள்'. வினையடைகளில் மிகும்.*

*மா: பங்குத்தந்தை, பங்குச்சந்தை ஆகியவற்றில் வரும் ' பங்கு' வினையடை அல்லவே. மிகுகிறதே!*

*ஆ: பங்குத்தந்தை... தொகைச்சொல். தொகையில் மிகும்.*

*மா: சங்கு சக்கரம் தொகைதானே (உம்மைத்தொகை). சங்குச்சக்கரம் என மிகவில்லையே!*

*ஆ: உம்மைத்தொகையில் மிகாது.*

*மா: ஐயா... போதும்! இன்னும் ஐயப்பட்டால் 'வலி' மிகும்!*

*(இதன் தொடர்ச்சியை அடுத்த பகுதியில் பார்க்க).*

# எளிய முறையில் யாப்பறிவோம்



**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**
பொருளாளர்,
பெங்களூரு தமிழ்ச் சங்கம்

***பாடம் :26.***
***கலித்துறை***

கடந்த பாடங்களில் கலிப்பாச் சார்ந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, தரவு கொச்சகக் கலிப்பா, கட்டளைக் கலிப்பா, வெண்கலிப்பா, வெளி மண்டிலம் பற்றியெல்லாம் அறிந்தோம். இப்பாடத்தில் கலித்துறைப் பற்றி அறிவோம்.

கலித்துறை: (பொதுவான வாய்பாடு)

- கலித்துறையில் நான்கு அடிகள் இருக்க வேண்டும்.
- ஒவ்வோரடியிலும் ஐந்து சீர்கள் கொண்ட நெடிலடியாக இருத்தல் வேண்டும்.
- நான்கு அடிகளிலும் ஒரே வகை எதுகை அமைதல் வேண்டும்.
- ஒவ்வோர் அடியிலும் முதல் சீரிலும், நான்காம் அல்லது ஐந்தாம் சீரிலும் பொழிப்பு மோனை வரலாம்.
- கலித்துறையில் கனிச்சீரும் வருவதுண்டு.
- சந்த வேறுபாடுகளும் உண்டு.
- ஐஞ்சீர் நான்கடி கலித்துறை யாகும்.
- பெரும்பாலும் தேமா, தேமா, கூவிளம், தேமா, புளிமாங்காய் என்னும் வாய்பாட்டில்இயற்றுவது ஒரு வகைச் சந்தக் கலித்துறைப்பா வாகும். இவ் வாய்பாட்டில் அமைந்த என்னுடைய ஒரு பாடல் எடுத்துக் காட்டுப் பாடலாய்க் காண்போம்.

***எடுத்துக் காட்டாக ஒரு பாட்டு:***

*ஆற்றின் தேமல் பேர்மணல் திட்டே; அதுபோன்றே*

*ஆற்று நீரின் நீர்குமிழ் தேமல் அதுவாகும்;*

*போற்றும் பண்பில் கற்பினை நீக்கிப் புவிதோறும்*

*மாற்றான் தன்னின் தோலுடல் நாடல் மனத்தேமல்!*

*(நெருப்பலையார்)*

*மேலே குறிப்பிட்ட வகையில் தேமா, தேமா, கூவிளம், தேமா, புளிமாங்காய் என்ற வாய்பாட்டில் அமைந்திருக்கும் பாடலை உற்று நோக்குங்கள்.*

- *அடுத்து, மா,மா, காய், மா,மா என்னும் வாய்பாட்டில் வருவது வேறொரு சந்த வகை. இதில், 2,3,4- ஆம் அடிகளில் உள்ள மூன்றாம் சீர்கள் கனிச்சீர்களாக வந்த காப்பியக் கலித்துறைப் பாட்டொன்றை எடுத்துக் காட்டாகக் காண்போம். கீழுள்ள என்னுடைய பாடலில் பொருளுக்கு முதன்மைக் கொடுத்து, பொழிப்பு மோனையைக் கணக்கில் கொள்ளவில்லை. இதுபோல, மூத்தப் பாவலர்கள் பின்பற்றலாம். ஆனால், யாப்புப் பயிலும் பாவலர்களாகிய நீங்கள் தவிர்த்தல் வேண்டும்.*

***எடுத்துக் காட்டாக ஒரு பாட்டு:***

*முகிலின் தாய்ப்பால் மழைப்பாலதால் மண்ணின் உயிர்கள்*

*மகிழ்ந்து சுமையைச் சுமக்கின்றதோர் வலியைத் தாங்கும்;*

*நெகிழ்ந்தே அன்னைப் பிள்ளைக்கினி தாய்ப்பா லூட்ட,*

*மகிழ்ந்தே வலிமை திறமையுடனே வாழ்வைத் தாங்கும்!*

*(நெருப்பலையார்)*

- *அடுத்து, மா, விளம், விளம், விளம், மா என்னும் வாய்பாட்டில் ஐந்து சீர்களும் ஈரசைச் சீர்களாக அமைந்து வருவது இன்னொரு வகை சந்தக் கலித்துறைப் பாவாகும். இந்த வாய்பாட்டில் என்னுடைய ஒரு பாட்டை எடுத்துக் காட்டாகக் காண்போம்.*

***எடுத்துக் காட்டுப் பாட்டு:***

*இடியும் மின்னலும் புயலுடன் இணைந்துமே மாந்தர்*

*அடிமை இனமென அலறிட அவையவை சாய*

*துடித்தே கொலையுமே செய்துதான் துவண்டிடக் களவால்*

*நடித்தே தின்னுதல் போலவே நாட்டிலா மாந்தர்?*

*(நெருப்பலையார்)*

- *கூவிளம்,தேமா, கூவிளம், தேமா, புளிமாங்காய் என்ற வாய்பாட்டில் வேறொரு வகை சந்தக் கலித்துறைப்பா உண்டு. இவ்வாய்பாட்டுக்கொரு என்னுடைய பாட்டைப் பார்ப்போம்.*

***எடுத்துக் காட்டுப் பாட்டு:***

*கண்ணிலே கண்டும் தீயிலே கையை அதிலிட்டல்*

*மண்ணினை அள்ளித் தன்தலை மேல்போட் டிடும்யானைக்*

*கொண்டகீழ்ச் செய்கை யாகுமே தீயோர் குணமன்றோ!*

*கண்டுணர்ந் தும்ஏன் தீமையோர் நட்பு? திருந்தாரே!*

*(நெருப்பலையார்)*

- *நெடிலடியின் ஐந்து சீர்களும் மூவசைக் கொண்ட காய்ச் சீர்களாய் அமைந்து வரும் கலித்துறையும் உண்டு. ஒவ்வோரடியின் நான்கு சீர்களும் காய்ச்சீர்களாய் வந்து, ஈற்றுச் சீர் கனிச்சீராய் வருதலுமுண்டு. அப்படி அமைந்து பாட்டு முடியும்போது ஏகாரத்தில் முடிவது சிறப்பாகும். எடுத்துக் காட்டாக என்னுடைய ஒரு பாடல் கீழே:*

***எடுத்துக் காட்டுப் பாட்டு:***

*சிற்றுயிரும் பேருயிரும் எவ்வுயிரே ஆனாலும் சின்னஞ்சிறு*

*பற்றின்றிப் பண்புடனே நல்வினைகள் விதைத்திருந்தால் பாங்காய்வரும்;*

*பெற்றெடுத்தப் பிள்ளைகளில் செய்திருந்த நல்வினைகள் பேறாகுமே!*

*நெற்பயிரில் பயிரிட்டோர் நல்வினையும் விளைதலிலே ஞானமாகுமே!*

*(நெருப்பலையார்)*



இனி , கலி மண்டிலம் துறையைப் பற்றி அறிவோம். இத்துறைப் பாட்டில் ஒவ்வோரடியும் தனித்தனி பொருளுடன் அவ்வடி முடிந்துவிடும். அடிகளைக் கீழே மேலே என மாற்றிப் போட்டாலும், சந்தமும் பொருளும் மாறாமல் ஆசிரியப் பாவில் வரும் அடிமறி மண்டல ஆசிரியப்பாப் போன்று முடியும். இப்பாட்டைக் கலிமண்டிலத் துறை என்பர். அடிதோறும் ஓரெதுகைப் பெற்று வரும். முதல் சீருக்கும் மூன்றாம் நான்காம் சீருக்கும் பொழிப்பு மோனை அமைதல் வேண்டும். மோனை இல்லாமலும் இருக்கலாம். எடுத்துக் காட்டாக என்னுடைய ஒரு பாட்டு:

***கலிமண்டிலத் துறைக்கோர் எடுத்துக் காட்டுப் பாட்டு:***

*கார்முகி லாயினும் காலத்தே பொழிதல் வேண்டும்!*

*பார்முழு வதுமே பகலொளிப் பொழிதல் வேண்டும்!*

*சீர்மிகு பால்பழம் சிறந்த உணவாய் வேண்டும்!*

*நீர்தான் எனினும் காலத்தால் அருந்த வேண்டும்!*

*(நெருப்பலையார்)*

மேலேயுள்ள கலி மண்டிலத் துறை அடிதோறும் ஒரு பொருளில் முடிந்துள்ளதால் அடியை மாற்றிப் போட்டு வாசித்தாலும் பொருள் மாறாது. சந்தமும் மாறாது. அடுத்து, கட்டளைக் கலித்துறையைப் பற்றி அறிவோம்.

*முன்னரே அறிந்த கட்டளைக் கலிப்பாப் போல, இப்பாட்டான கட்டளைக் கலித்துறைப் பாவும் எழுத்தெண்ணிப் பாடுவதாகும்.*

- *கட்டளைக் கலித்துறை: (வாய்பாடு)*

- *இந்தக் கட்டளைக் கலித்துறைப் பாட்டு நான்கு அடிகள் கொண்டதாகும். நான்கடிக்கும் ஓரெதுகை வருதல் வேண்டும். ஒவ்வோரடியும் நெடிலடியாய் ஐந்து சீர்கள் கொண்டதாகும்.*

- *ஒவ்வோரடியின் முதல் சீரிலும் ஐந்தாம் சீரிலும் மோனை அமைய வேண்டும்.*

- *ஒவ்வோரடியின் முதல் நான்கு சீர்களும் ஈரசைச் சீர்களாகவே வரும். அருகி மூவசைச் சீர்களான காய்ச்சீரும் வரலாம். ஆனால், எழுத்தெண்ணிக்கைச் சரியாக அமைதல் வேண்டும். இந்த நான்கு சீர்களில் வெண்டளை அமைந்து "மா முன் விளம், விளம் முன் மா, காய் முன் மா" என்ற தளை அமைதல் வேண்டும். ஆனால், ஒவ்வோரடியின் ஐந்தாம் சீருக்கும், அடுத்த அடியின் முதற் சீருக்கும் தளை பார்க்கத் தேவையில்லை.*

- *ஒவ்வோர் அடியிலும் இறுதிச் சீர் கருவிளங்காய், கூவிளங்காய்ச் சீர்கள் வருதல் வேண்டும். அல்லது அருகி ஒன்றிரண்டு தேமாங்கனி, புளிமாங்கனிச் சீர்கள் வரலாம்.*

- *ஒவ்வோரடியும் முதற் சீர் நேரசையில் தொடங்கினால் மெய்யெழுத்துகளான ஒற்றுகள் நீக்கி பதினாறு எழுத்துகளும், நிரையசையில் தொடங்கினால் பதினேழு எழுத்துகளும் வருதல் வேண்டும்.*

- *பாட்டு முடியும்போது ஈற்றடியின் ஈற்றுச் சீரின் ஈற்றசை ஏகாரத்தில் நிறைவு பெறுதல் வேண்டும். என்னுடைய எடுத்துக்காட்டுப் பாடலொன்றைக் காண்போம்.*

***நேரசைக் கட்டளைக் கலித்துறைப் பாடல்:***

*வாழை யடியிலே வாழையாய் வந்தால் மரபழகே!*

*வாழையும் முள்மர மானால் மரபும் வளருமோதான்?*

*ஏழையே ஆயினும் செல்வரே ஆயினும் இன்பமிகு*

*தாழை மணத்தின் மரபின் வழியரால் தான்சிறப்பே!*

*(நெருப்பலையார்)*




*இந்த நேரசையில் தொடங்கப் பட்ட இப்பாட்டில் மெய் நீக்கிப் பதினாறு எழுத்துகள் வந்துள்ளன என்பதை அறிக. அடிதோறும் ஓரெதுகை, முதல் சீரிலும் ஐந்தாம் சீரிலும் மோனை, ஈற்றுச் சீர் கருவிளங்காய் - கூவிளங்காய்ச் சீர் வந்து ஏகாரத்தில் பாட்டு முடிந்ததை நோக்குக. அடுத்து நிரையசையில் தொடங்கும் என்னுடைய எடுத்துக் காட்டுப் பாட்டொன்றைக் காண்போம்.*

***நிரையசைக் கட்டளைக் கலித்துறைப் பாடல்:***

*மரபுக் கழகென வந்தி செயாமலே வாழையென*

*மரபின் வழியில் மலர்ந்து வளர்ந்ததும் மக்களுமே*

*வரமாய் அமைந்தால் புவியிலே ஓங்குமே மாண்புகளும்;*

*மரமாய் வளர்ந்துமே மாண்பிலா மக்கள் மரபழிப்பே!*

*(வந்தி- மலடு) (நெருப்பலையார்)*

*நிரையசையில் தொடங்கும் இப்பாட்டில் பதினேழு எழுத்துகள் வந்துள்ளன.*

*அடுத்த பாடத்தில் வேறு சில துறையைச் சார்ந்த பாட்டுகளையும், இலக்கணமும் அறிவோம். பாடம் பெரியது என்பதால் கற்கும் முயற்சியும் பெரியதாக இருத்தல் வேண்டும்.*

*யாப்பிலக்கணம் வளரும்...*

# மதுரையின் மடை தூண்கள்/குமுழி தூண்கள்



**பேரா.ப.தேவி அறிவுச் செல்வம்**
*கோயில் கட்டிடக்கலை மற்றும் சிற்பத்துறை*
*கள ஆய்வாளர்*

*பருவகால மழை நீரை சேமிக்கும் இடமாக ஏரிகளும் பாசன கண்மாய்களும் குளங்களும் கிணறுகளும் இருக்கின்றன. இங்கிருந்து பாசனத்திற்கு தேவையான நீரினை கொண்டு செல்ல ஏரியின் உள்ளே கருங்கல்லில் 5 அடி உயரத்திற்கு மேல் செவ்வக வடிவில் ஏணி போன்ற அமைப்பில் குமுழி தூண்கள் அமைக்கப்பட்டு இருக்கும். இந்த அமைப்பானது தேவையான நீர் மற்றும் ஏரியில் தேங்கியிருக்கும் சகதியினை வெளியேற்றும் வகையில் அமைக்கப்பட்டிருக்கும்.*

*இந்த தூணின் பக்கங்களில் மதகு, ஏரியினை கட்டியவர்கள், மதகு எவ்வாறு பிரிக்கப்பட்டது அதனால் ஏற்படும் பயன்கள் போன்ற பல விவரங்களை கல்வெட்டாக செதுக்கியிருப்பார்கள்.*

*அந்த வகையில் இதுபோன்ற குமுழி தூண்கள் மதுரையில் பத்திற்கும் மேற்பட்ட இடங்களில் இருக்கின்றது. திருவதவூரில் இருக்கும் மடைத் தூணில் மூன்றாம் குலோத்துங்க சோழ மன்னர் பாண்டிய நாட்டின் மீது போர் தொடுத்து வெற்றி கண்டார். அப் போரில் கலந்துகொண்ட மங்கலக் கோன் பாஞ்சால ராஜன் என்ற அதிகாரி இவ் ஊரில் உள்ள பாசன ஏரியில் தன் பெயரில் மடை அமைத்ததை பற்றிய செய்தி உள்ளது.*

*இதே மடைத்தூணில் சோழ நாட்டின் மீது படை எடுத்து வெற்றி கண்ட முதலாம் மாறவர் சுந்தரபாண்டியன் மன்னரின் காலத்தில் பாண்டிய மன்னரின் அதிகாரியான விரதமுடிச்சானான பராக்கிரம சிங்கத்தேவன் இதனை திருத்தி அமைத்ததை பற்றியும் உள்ளது. இந்த மடைத் தூணின் மேல்புறத்தில் குறுக்காக புருஷா மிருகம் என்ற சிற்பம் பிற்காலத்தில் இணைக்கப்பட்டுள்ளது.*

*அரிட்டாபட்டியில் கிபி 1231 இல் முதலாம் மாறவர் சுந்தரபாண்டியர்காலத்தில் அதிகாரிகள் குளத்திற்கும் வயலுக்கும் நீர் பங்கீடு செய்தது பற்றியும்,*

*ஆனையூரில் இருக்கும் மடை கல்வெட்டில் பிள்ளை மாவலி வாணாதராயர் அகம்படி முதலிகளில் பெரியான் உய்ய வந்தானான விக்கிரமசிங்கத்தேவன் என்பவன் ஏரியில் மடை செய்வித்ததை பற்றியும் கருங்காலக்குடி வயலி பாறை பகுதியில் உள்ள ஏரியின் மடைக் கல்லில் உள்ள கல்வெட்டில் அம் மடையினை வத்தலை ராவுத்தர் என்ற இஸ்லாமியர் திருத்தி அமைத்தது பற்றியும், ஆமூர் மடைதூணில் கிபி ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டில் பாண்டிய மன்னரின்*

அதிகாரியாக விளங்கிய கலிதீரனின் தந்தை சாத்தன் என்பவர் பற்றியும், மீனாட்சிபுரம் கண்மாயினை கிபி ஒன்பதாம் நூற்றாண்டில் சசிவாகரணத் தட்டான் செய்வித்ததையும் தெரிவிக்கிறது.




மேலும் இதே போன்று மடைத் தூண்கள் உறப்பனூர், வெள்ளரிப்பட்டி, நிலையூர், நரசிங்கம், மாங்குளம் என மதுரையில் 10க்கும் மேற்பட்ட பகுதிகளில் காணப்படுகிறது.

இவ்வாறு அரசர்களும் அதிகாரிகளும் பொதுமக்களும் ஏரிகளை உருவாக்கி அவற்றை பாதுகாத்தது பற்றியும் மடை தூண் கல்வெட்டுகள் வழியாக அறிந்து கொள்ள முடிகிறது. அப்படியான சிறந்த அறிவியல் தொழில்நுட்ப அமைப்பு கொண்டு ஏற்படுத்தப்பட்ட மடை தூண்கள் அரிட்டாபட்டி போன்ற இடங்களில் சிதைந்து இருப்பது வேதனைக்குரியது.

*architechdevi@gmail.com*

# நூலறி(வு)முகம்

நூல்: கடைசி கூர் வரை எழுத முடியாத பென்சில்
ஆசிரியர்: மருத்துவர் கு. சிவராமன்
வெளியீடு: உயிர்மை பதிப்பகம்

**வித்யா மனோகர்**
வல்லினச் சிறகுகள்



சித்த மருத்துவத்துறையில் முன்னோடியாக, பல்வேறு நவீன ஆய்வுகள் மற்றும் உரைகள் அளித்துவரும் மருத்துவர் கு.சிவராமன் அவர்கள்

போகர், அகத்தியர் முதலான பதினெட்டு சித்தர்களின் இலக்கியங்களில் சொல்லப்பட்டுள்ள பல்வேறு மூலிகைகளின் குணங்களை, அவற்றின் பயன்பாடுகளைக் கற்றுத் தெளிந்தவர்; சித்த மருத்துவத்தின் மாண்புகளையும் இயற்கை உணவின் அவசியத்தையும் மக்களிடம் கொண்டு சேர்ப்பதைத் தலையாயப் பணியாகக் கொண்டு செயல்படுபவர். சிறுதானியங்கள் குறித்த குறித்த இவரின் தொடர் உரைகளால், குதிரைவாலியும், தினையும், கம்பும், இன்னபிற சிறுதானியங்களும் மக்களின் அன்றாட உணவுப் பயன்பாட்டில் பெரும் பங்கு வகிக்கின்றன என்பதில் மாற்றுக் கருத்துகள் இருக்க வாய்ப்பில்லை.




தேர்ந்த மருத்துவராக, இயற்கை ஆர்வலராக, பூவுலகின் நண்பராக, அறம் சார்ந்து பயணிக்கும் மருத்துவர் சிவராமனின் எழுத்து கவித்துவமானது; தனித்துவமானது. வசீகரிக்கும் சொல் நயம் அவருக்கு இயல்பாக வாய்த்திருக்கிறது.

சில ஆண்டுகளுக்கு முன்னால் மரு.சிவராமனின் 'மருந்தென வேண்டாவாம்' என்ற நூல் வாசிக்கும் வாய்ப்பு கிட்டியது. அதில் , அம்மாவின் மடியில் படுத்து உறங்குவது போலத்தான் வீட்டுத் திண்ணையில் படுத்திருப்பதும். வீட்டுத் திண்ணைகள் சொல்லிக் கொடுத்த விஷயங்கள் நிறைய. மார்கழி குளிரில் போர்வையைச் சுருட்டிக்கொண்டு முகம்

*மட்டும் தெரியும் படி திண்ணையில் உட்கார்ந்து பாட்டி வீட்டு முற்றத்தை, சாணி கரைத்த தண்ணீரில் தெளிப்பதை வேடிக்கை பார்ப்போம். வாசலில் ஐந்து புள்ளி அரிசிமாக் கோலம் போட்டு கோலத்தின் நடுவில் சாணிப்பிள்ளையார் வைத்து அதில் பூவரசம் பூவை சொருகி, வாசலை அலங்கரித்த நாட்கள் மனத்தை விட்டு நகரவில்லை. ஒருநாள் பூவரசம் பூ, ஒரு நாள் கிரேந்தி ,ஒரு நாள் தங்கரளி மறுநாள் பூசணி பூ...அந்த மலர்களைப் போல கிராமத்து நாட்கள் தினம் தினம் மகிழ்வித்த விஷயங்களும் கற்றுக் கொடுத்ததும் ஏராளம் என்று அழகுற எழுதியிருந்தார். வாசித்த வேளையில், மனத்திரையில் ஒவ்வொரு சொல்லும் காட்சியாக விரிந்து உள்ளே ஒரு பூ மலர்ந்ததைப் போலொரு சிலிர்ப்பு எனக்கு !மருத்துவருக்குள் இருக்கும் கவிமனத்தின் கொடை அது!*

*கடைசி கூர் வரை எழுத முடியாத பென்சில் என்ற தலைப்பில் தன்னுடைய முதல் கவிதைத் தொகுப்பை வெளியிட்டிருக்கும் மருத்துவருக்கு முதலில் அன்பான வாழ்த்துகள்!*

*நூலில் 62 தலைப்புகளில் கவிதைகள் உள்ளன. கவிதைகளுக்குள் நுழைவதற்கு முன்னால் ஒருவரிக் கவிதைபோல "என் ராஜீக்கு" என்று தன் காதல் துணைவிக்கு கவிதை நூல் சமர்ப்பணம் செய்திருப்பது அழகு!*

*பேச்சிலும், எழுத்திலும், மருத்துவப் பயிற்சியிலும், அரவணைக்கும் அத்தனை நட்பிலும் நிறைந்திருக்கும் தன்*

*அம்மாவை,*
*"அவள்*
*சுமந்தவள்...*
*இப்போதும்*
*சுமப்பவள்" என்கிறார். அறிவமுதூட்டிய அம்மா நிறைந்திருக்கிறாள் முதல் கவிதையில் அன்பாய்; முழு கவிதைத் தொகுதியில் அறமாய்...*

*முனகிக் கொண்டே முடங்கிக் கிடக்கும் பருவம் அல்ல மூப்பு. மூப்பென்பது வரம்.*

*"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்கிறது திருக்குறள். உறங்குவதை போன்றது இறப்பு அதனால் இறப்பைப் பற்றிக் கவலை கொள்ளத் தேவையில்லை. அன்றியும் இறப்பதற்கு முன்னால் வரும் முதுமைப் பருவத்தில் அறச்சிந்தனைகளும், அறச்செயல்களும் மிகுந்திருத்தல் நலம். கவிஞர், 'என் முதுமை' என்ற கவிதையில், "அந்த வனத்தில் இதுவரையும் செதுக்காத வாகையும் தேவதாரும் போல வானம் பார்க்க வேண்டும். என் வெடிப்புகளிடையே ஏறும் சிற்றெறும்பில் சிலாகிக்காமல் வேர்களில் ஒட்டிய பூஞ்சைக்கும் நுனிக் கிளையில் இளைப்பாறும் ரீங்காரச் சிட்டுக்கும் எடுத்துக் கொள்ள ஏதேனும் தர வேண்டும்"என்கிறார்.*

*"ஒரு நாள்*
*பெருமழைக்கோ*
*பேய்க்காற்றிற்கோ*
*சட சடவென*
*முறிந்து*
*சரியவேண்டும்*
*அப்போதும்*
*சத்தமில்லாமல்*
*காட்டு எறும்புகள்*
*கடந்திடும் பாலமாக*
*நெடுநாள் கிடந்திட வேண்டும்"....*

*பல்லுயிர் போற்றும் பண்பிது! கவிமனத்தின் மேன்மையிது! மண்ணோடும், விண்ணோடும், மரங்களோடும், சிற்றெறும்புகள், சிட்டுக்குருவிகளோடும், ஒட்டி உறவாடும் கவிஞரின் அன்புள்ளம்,*

*'ஒரு கோப்பை தேநீர்' என்ற கவிதையில், கவலையில் கரைந்திருக்கிறது...*



*"மண்ணையும்*
*மனிதனையும்*
*உறிஞ்சி*
*உறிஞ்சி*
*இப்போது*
*நான்*
*உறிஞ்சும் போதும்*
*கூடவே*
*கொஞ்சம்*
*குருதி வாசனை"*

*தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களின் சொல்லில்அடங்கா வேதனையை இப்படிச் சொல்கிறார் கவிஞர்,*

*"வள்ளுவனுக்குத்*
*தெரியாத*
*தேநீர்க்காட்டில்*
*மோப்பக் குழையும்*
*அனிச்சம்பூம் பாதம்*
*அவளுக்கேது?*
*மோதும் பாறையில்*
*பற்றிப்பிடிக்க*
*காட்டுக்கொடியின்*

*வேர்களைப்பற்றியவாறு*
*கால்கள்"... என்கிறார்.*

*'மண் ஒட்டிய'.... என்ற தலைப்பில்,*

*"கொய்திடாமல்,*
*கோர்த்திடாமல்,*
*குலதெய்வம் கொண்டை சேர்ந்திடாமல்,*
*காமம் சூழ் உலகில் கசங்கிடாமல்,*
*எவரும் சூடாத பூவென*
*கோவித்து*
*வீழ்ந்து மாய்ந்திருக்குமோ?*
*என்று நிராகரிப்பின் வலி எழுதிச் செல்கிறார்.*
*"ஒருபோதும்*
*மண் ஒட்டிய மலர்களைக் கடந்து செல்லாதீர்.*
*மண் ஒட்டிய மனிதர்களையும்!"*
*-இச்சொற்களையும் அவை கடத்தும் உணர்வினையும் கடத்தல் அரிது...*

*அடுத்து 'மலைப்பாதை உழவன்' என்றொரு கவிதை.*

*"மலைத் தோட்டத்து*
*உழவன் நான்;*
*உலகத்து*
*உச்சியிலும்*
*நான் சாலையோரமே!*

*சிவந்த இதன் தோலுக்கு*
*மட்டுமே தெரியும்*
*இக்கனிக்கு நான்*
*ஊற்றியது*
*மலையில் ஊறிய நீரல்ல;*
*எலும்பில் ஊறிய*
*குருதியும் என்று"...*

***சமூக நலன் சார்ந்த நற்கவிதையிது!***

*வெடித்த கால்கள் மடக்கி; நரம்பு புடைக்க உழைத்து உழைத்து மேனி கருத்து; காட்சிப் பொருளாக வீதியில் அமர்ந்து விற்பனை செய்யும் மலைப்பாதை உழவர்கள் நிலை வேதனைக்குரியது. "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்ற பாரதி இன்றிருந்தால் நெஞ்சு பொறுக்காமல் துடித்திருப்பான்!*

*'காதல்' என்ற தலைப்பில் ஒரு கவிதையில், "காதல் காதலிப்பவனுக்கு மட்டுமே தெரியும்" என்கிறார்.*

*"உன்னைக் காணும் பொருட்டுநான்*
*ஓடிவரும் அருவியன்றி*
*என்னை உன்முன் காட்டுதற்காய்*

*என்றும் வந்து நிற்க மாட்டேன் தோழி" என்பார் புரட்சிக்கவி பாரதிதாசன். காதலர்கள் சந்தித்துக்கொள்ளும் தருணங்கள் அற்புதமான நினைவுத் தடங்களாக நிலைத்துவிடக்கூடியவை.*

*"யதேச்சையாய்*
*என்னைக்*
*கடந்து செல்லவில்லை*
*கரிசனத்துடனான*
*எனக்கான*
*மெனக்கடல் அது"....- -கவிஞரின் வரிகள் புரிதலில் பூத்துக் கனிந்திருக்கிறது காதலாக!...*

*"கடைசி கூர் வரை எழுத முடியாத பென்சில்"... அம்மாவின் ஒக்கலில் இருந்து ஐந்தருவியில் சாரல் தொட்டுக் குளிர்ந்து; தொலைத்தவற்றில் புன்னகைகளை மட்டும் தேடி; 'புள்ளத்தாச்சியா'? எனக் கேட்டு "கூட நூறு போட்டு இருக்கேன்" எனக் கொடுக்கும் மீன்காரம்மா வின் விளிம்பு நிலை அறத்தை வியந்து;*

*'கற்காலம்*
*செம்புக் காலம்*
*இரும்புக் காலம்*
*என்ற வரிசையில்*
*எங்களைப் பிணக்காலம்*
*என பின்னுக்குத்*
*தள்ளப் போகிறாயா?'*

*என்று கரோனா பெருந்தொற்று காலக் கொடுமையில் நொந்து; "தனித்திருத்தல் தவம் , தனியாயிருத்தல் வலி" எனும் உளவியல் உணர்ந்து; 'எல்லாம் நிறமும் வெள்ளைக்குள்' என்று தெளிந்து; கோளறு பதிகம் சொல்லும் போதும் குழந்தையைக் கொஞ்சம் போதும் உந்தன் குழி விழும் கன்னம் வந்து நிற்பது எப்போதிருந்து தோழி? என்று காதலில் குழைந்து; "அப்பாவும் அவர் சைக்கிளும் இனி எப்போது பயணிக்க?" என்று பரிதவித்து, இன்னும் இன்னும் நிறைய எழுதியிருக்கிறது 'கடைசி கூர் வரை எழுத முடியாத பென்சில்'!*

*"மத்தாப்பை மிதிக்காமல்*
*கணுக்கால்வரை உயர்திய*

*பட்டுப்பாவாடையுடன்*
*அந்த ஓட்டைப்பல் சிறுமி*
*குழிக்கன்னத்தோடு*
*சிரித்து கடந்தாள்.*
*நான் இன்னும் அங்கேயே கடந்து செல்ல முடியாமல்"...*
*அழகியல் பேசும் இக்கவிதையைக் கடக்க முடியாமல் இப்போது நானும்!...*

*பள்ளி நாள்களின் நினைவுச் சின்னமாக இதயத்திலிருக்கும் குட்டிக்குட்டி ஊதா பென்சில்கள் கொண்டு*

*இன்னும் எழுதுக!*
*நிறைய எழுதுக!*
*கவிதையில் பொலிக!*

---

## என்னைப் புரிந்துகொள்

*ஆங்கிலத்தில் - சார்லஸ் புக்கோவ்ஸ்கி*
*தமிழில் - செ. ராஜேஸ்வரி*

என்னைப் புரிந்துகொள்

நான் சாதாரண உலகத்தைப் போல் இல்லை

எனக்கென்று ஒரு பித்து உண்டு

நான் வேறொரு பரிமாணத்தில் வாழ்கிறேன்

ஆத்மா இல்லாத பொருட்களுக்கு

என்னிடம் நேரம் இல்லை



*அருந்தமிழ் வளர்த்த அருளாளர் – I*

# செருமானியத் தமிழர் சீகன்பால்கு

**பேரா.முனைவர் மோ.மைக்கேல் பாரடே,**
*மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்,*
*சென்னைக் கிறித்தவக் கல்லூரி.*



*அன்னைத் தமிழுக்குக் காலத்தால் அழியாத அருங் கொடைகளை நல்கி, இயல்பிலேயே அளந்துரைக்க முடியாத அறப்பழமையும் என்றும் மாறாத இளமைப் பொலிவும் வாய்ந்த இவ் உலகப் பெருமொழியின் உயர்தனிச் செம்மொழித் தகுதிப் பாட்டை உலகறியச் செய்திட உழைத்தோர் பல்லோர். நமது நன்றிக்குரிய அப்பெருமக்களுள் பலர், தமிழைத் தாய்மொழியாகக கொண்ட தமிழ்க்குடியினரோ மொழியாய்வும் இலக்கியப் பணியும் முதன்மையாகக் கொண்ட தமிழறிஞர்களோ மட்டும் அல்லர்.*

*வேறு பணிநோக்கங்களுக்காகத் தாய்த்தமிழகம் வந்த வேற்று நாட்டவர் என்பதுதான் வியப்புக்குரிய செய்தி. அவ்வகையில், உலகப் பெருஞ்சமயமாம் கிறித்தவத்தின் கோட்பாடுகளை இம்மண்ணில் விதைத்திடவும் விளைவித்திடவும் வந்த அருள்தொண்டர்களின் (Missionaries) அரும்பணிகள் அளப்பரியன. அதிசயிக்கவைப்பன அத்தகு அருளாளர்கள், அவர்தம் முதன்மைப் பணியான சமயப் பணிகளையும் தாண்டி அன்னைத்தமிழுக்கு ஆற்றிய அரும் பணிகளை, தனித்தனி அருளாளராக எடுத்துத் தொகுத்துரைப்பதே இக்கட்டுரைத் தொடரின் நோக்கம் அவர்தம் சமயப் பணிகளைச் சுட்டி, தமிழ்ப்பணிகளுக்கு உள்நோக்கம் கற்பிப்பதும் அவற்றைத் திரித்துரைப்பதுமான தரங்குறைந்த விமர்சனங்களில் சமுதாயத்தில் உயர்மட்டத்தில் உள்ளோரும் ஈடுபடும் போக்கு அண்மைக் காலங்களில் தலையெடுத்திருப்பதால், உண்மை வரலாற்றை உள்ளபடி உணர்த்துவதும், ஆவணப்படுத்துவதும் இக்கட்டுரைத் தொடரின் தலையாய நோக்கமாகும் இவை பற்றியெல்லாம் கடந்த இதழில் வெளியிடப்பட்ட அறிமுகக் கட்டுரையில் விரிவாக விளக்கப்பட்டது.*

*கட்டுரைத் தலைப்பையொட்டிய இந்த நேரடி முதற்கட்டுரையில் பதினேழாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் தம்தாய் நாடாம் செருமனி நீத்து, தமிழகம் போந்து, அதன் பின்னர் தமிழராகவே தமிழுக்காகவே - தமிழருக்காகவே தொண்டு வாழ்வு வாழ்ந்த பர்த்தலோமேயு சீகன் பால்கு அவர்களின் வாழ்வும் பணிகளும் பற்றிக் காண்போம். அதனால் தான் அவரை செருமானியத் தமிழர்' என்று நன்றியுணர்வுடன் போற்றுகிறோம்.*



**சீகன்பால்கு அடிகளாரின் இளமையும் கல்வியும்**

*இந்தியாவிற்கு முதல்முதலாக அருட்பணியாற்ற வருகைதந்த சீர்திருத்தத் திருச்சபையின் (Protestant church) அருள்தொண்டர் பர்த்தலோமேயு சீகன் பால்கு அவர்கள். அவர் செருமனி நாட்டின் தென்கிழக்குப் பகுதியிலுள்ள சக்கோனியா தேசத்திலுள்ள புல்ஸ்நித்ஸ் என்னும் சிற்றூரில் 1683 (சேவியர் 1682 என்கிறார்) ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 10 ஆம் நாள் (இன்னொருவர் 24ஆம் நாள் என்கிறார்) பிறந்தார். இவரது தந்தையார் பெயர் பர்த்தலோமேயு, தாயார் காத்தரீனாள். உடன் பிறந்தவர்கள் 5 பேர். ஓர் அண்ணனும் நான்கு சகோதரிகளும் பக்திவைராக்கியம் மிக்க பெற்றோரால் இறைப்பற்றிலும் ஒழுக்கத்திலும் கண்டிப்பாக வளர்க்கப்பட்டவர். எனினும் இளமைப் பருவத்திலேயே தம் அன்புத்தாயையும் தொடர்ந்து தந்தையையும் இழந்தவர். இவரது பிற்கால இறைத்தொண்டு வாழ்வுக்கு வித்திட்ட இவரது தாய், தன்பிள்ளைகளுக்கு இறைவாக்காம் திருமறையைத்தான் அழியாத செல்வமாக அளித்துச் செல்வதாகத் தம் மறைவுக்கு முன் குறிப்பிட்டது நம் நெஞ்சை நெகிழ்விப்பதாகும். பெற்றோரின் மறைவுக்குப் பிறகு மூத்த சகோதரியின் மேற்பார்வையிலேயே அவரது வாழ்க்கைப் பயணம் தொடர்ந்தது. முதலில் காமென்ஸ் என்ற இடத்திலுள்ள பள்ளியில் சேர்ந்து, கிரேக்கு, இலத்தீன் மொழிகளை விரும்பிப் படித்தார். பிறகு 1694 ஆம் ஆண்டில் கொயர்லிட்ஸ் (Goerlitz) என்ற ஊரிலுள்ள பள்ளியில்*

மேற்படிப்பைத் தொடர்ந்தார். கல்வியில் அதிக திறமையுள்ளவராய், பல ஆண்டுகளுக்கான படிப்பைக் குறுகிய காலத்திலேயே முடித்தார். உள்ளூர்த் திருச்சபையினரோடு உள்ளார்ந்த உறவு கொண்டிருந்தார் பின்னர், அவரது இசைநாட்டம் காரணமாக, இசையும் பயின்றார். அதன் பின்னர், அவரது ஆழ்ந்த மன விருப்பத்தின்படி இறையியலும் கற்றார். புகழ்மிக்க செருமானிய நாட்டின் ஹல்லே பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் ஹெர்மான் பிரான்கே, லாங்கே, ஸ்டீனர், கான்ஸ்டெய்ன் போன்றோர் அவரை இத்துறையில் பயிற்றுவித்தனர். ஊக்குவித்தனர். அடிக்கடி அவருக்கு உடல்நலக்குறைவு ஏற்பட்ட போதும் தம்கல்விப் பயிற்சியில் அவர் தளராது நின்றது குறிப்பிடத்தக்கது.

அடிகளாரின் இந்திய வருகை

இப்படிப்பட்ட வலுவான கல்வி மற்றும் ஒழுக்கமான வாழ்வுப் பின்னணியில் சீகன்பால்கு வளர்ந்து வந்தபோதுதான், அக்காலத்திலிருந்த டென்மார்க் அரசர் பிரடெரிக் IV என்பவர், அயல்நாடுகளுக்குச் சென்று அருட்பணி செய்ய வருமாறு அழைப்புவிடுத்தார். அந்த அழைப்பை, ஏற்கெனவே இறைப்பணியில் நாட்டமுற்றிருந்த செருமானிய இளைஞர்களான சீகன்பால்குவும் அவரது நண்பர் ஹெய்ன்ரிட்ஸ் ப்ளூட்சோவும் மகிழ்வுடன் ஏற்று, இந்திய நாட்டுக்கு புறப்பட்டு வந்தார்கள். தமது நாட்டிலுள்ள பெர்லினை விட்டு டென்மார்க் நாட்டின் தலைநகரான கோபன்ஹேகனுக்கு வந்து 'பிரின்செஸ் சோபியா ஹெட்லிகா' என்ற கப்பலில் அங்கிருந்து நம் தமிழ்நாட்டு நகரான தரங்கம்பாடிக்கு எட்டுமாதக் கடற்பயணத்துக்குப் பிறகு வந்து சேர்ந்தனர். 1706, ஜீலைத் திங்கள் 9 ஆம் நாள் தமிழகம் வந்த அவர் அடுத்த சுமார் 13 ஆண்டுகளில் செய்த சாதனைகள். தமிழக வரலாற்றிலேயே ஒரு சகாப்தம் என்று சொல்லத்தக்கன. தமிழ் மண்ணிலேயே இறுதிவரை வாழ்ந்து, கடைசியில் தமிழ் மண்ணிலேயே அடக்கமான அம்மாமனிதனின் தியாகத் தொண்டுகளையே இக்கட்டுரையில் தொகுத்துரைக்க முற்படுகிறேன்.

**கப்பல் பயணமும் தமிழ்க்கல்வியும்**

எட்டுமாதம் நீண்ட கடற்பயணம் நண்பர்கள் இருவருக்கும் இனிதாக அமையவில்லை. கப்பலின் தலைவன் பயணத்தின் போது ஒரு பெண்ணுடன் தவறாக நடந்ததைச் சீகன்பால்கு கண்டித்ததால் அவனது சினத்துக்கு இலக்கானார். பயணத்தின் நடுவே கடல் கொந்தளிப்பு போன்ற ஆபத்துகளும் சூழ்ந்தன. எல்லாவற்றையும் கடந்து இறையருளால் அலைகள் பாடும் தரங்கம்பாடிக் கரைக்கு வந்தபோது, டென்மார்க் அரசரின் அரச முத்திரையோடு கூடிய பத்திரத்தோடு வந்தபோதும், அவ்வூரை ஆண்டு வந்த டென்மார்க் நாட்டைச் சேர்ந்த ஆளுநர் இவர்கள் வருகையை விரும்பவில்லை. நெடுநேரம் கொடிய வெப்பத்தில், சுடுமணலில் காக்கவைத்தார் நகருக்குள்நுழைய அனுமதிக்காமல்.

வேண்டாவெறுப்பாக, பின்னர் டென்மார்க் குழந்தைகளுக்கான பள்ளியில் இருவரையும் வேலைபார்க்கச் சொன்னார். அவர்கள் சிலகாலம் சிறையிலும் வீண்பழிசுமத்தி அடைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இருந்தாலும் இறைப்பணியாளர் இருவரும் மனம்தளரவில்லை. அவர்களுக்குத் தெரிந்த ஒரு நண்பரின் வீட்டில் தங்கினர். எல்லாவற்றுக்கும் மேலாக, இங்கு தங்கள் இறைப்பணியைத் தொடர, தங்களுக்கு உள்ளூர் மொழியறிவு மிகத்தேவை என்றுணர்ந்து, அரிய முயற்சிகளோடு, நம்தாய்த்தமிழைக் கற்கத் தொடங்கினார். தமிழ்படிக்கும் முன்பு அக்காலத்தொடர்பு மொழியாக இருந்த போர்த்துகீசிய மொழியையும் கற்க வேண்டி இருந்தது. பின்னர், போர்த்துகீசிய மொழி அறிந்த அழகப்பன் என்பவரை அழைத்து அவரிடம் தமிழ்பயிலலானார். அதற்கு முன்னர் தமிழ்ப்பள்ளி நடத்திக் கொண்டிருந்த தமிழர் ஒருவரை அழைத்து தம்விடுதியிலேயே தமக்கும் பிள்ளைகளுக்கும் தமிழ்கற்பிக்க வைத்தார். சிறுபிள்ளைகளோடு பிள்ளையாக இளைஞர் சீகன்பால்குவும் தரையில் அமர்ந்து, மணலில் கைவிரல்களால் எழுதி, தமிழ் எழுத்துகளைப் பயின்றார். அழகப்பன் அவர்களிடம் படிப்படியாகத் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்று, தமிழிலிருந்து செருமன் மொழிக்கும், செருமன் மொழியிலிருந்து தமிழுக்கும் மொழிபெயர்க்குமளவு தமிழ்ப் புலமைபெற்றார். தமது தமிழ்க்கல்வி பற்றியும் தமிழ்ப் பண்பாடு பற்றியும் அவர் குறிப்பிடும் செய்திகள் நம்மை வியக்கவைக்கின்றன.

> *'தமிழர்களே, பெரும்பான்மையானவர்களாக இருந்தனர். இவர்கள் பனை ஓலைகளில் எழுத்தாணியைக் கொண்டு மிக அழகாகத் தமிழ் எழுத்துக்களைத் தீட்டும் திறமை பெற்றவர்கள். தமிழ் மொழி மிகப் பழமையான மொழிகளுள் ஒன்று. தமிழர்கள் சகலவிதக் கலைகளிலும் தேர்ச்சி பெற்றவர்கள். அவர்கள் எழுதாத நூல்களே இல்லை என்று சொல்லலாம். வாணிபம், ஓவியக் கலை, ஆகியவற்றில் கைதேர்ந்தவர்கள். அவர்களின் நூல்களைப் படித்து தமிழர்கள் யார் என்பதைப் புரிந்து கொள்ளலாம். ஐரோப்பியக் கிறிஸ்தவர்கள் அவர்களின் வெளித் தோற்றத்தை மட்டும் கண்டு தமிழர்களை ஞானமில்லாதவர்கள் என்றும், நாகரிகமில்லாமவர்கள் என்றும் கூறி வந்தனர். நானும் முதலில் தமிழ்மொழி அற்பமானது என்றும் அவர்களின் வாழ்க்கை தவறானது எனவும் எண்ணி விட்டேன். ஆனால் தமிழ் மொழியைப் பயின்று தமிழர்களோடு உரையாடி, தமிழ் இலக்கியங்களை ஆராய்ச்சி செய்த பின்னர் என் எண்ணத்தை முற்றிலும் மாற்றிக் கொண்டேன். தமிழ் இலக்கண விதிகள் மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளன. நாட்டாட்சிச் சட்டமும், நீதிநெறி விளக்க நூல்களும், மக்களின் வாழ்க்கையைப் பாதுகாக்கின்றன. மனோதத்துவ வேதாந்தப் பொருட்களில் தமிழர்கள் எழுதியிருக்கும் கட்டுரைகள் வியப்புக்குரியன.*

*வேத சாஸ்திர நுட்பங்களை உயரிய முறையில் ஆராய்ச்சி செய்திருக்கின்றனர். ஆகையால் நான் தமிழை விருப்பமுடன் பயின்று அதில் எழுதப்பட்ட தத்துவங்களைக் கற்கலானேன்'.*



தமிழ்படிப்பதில் அவருக்கிருந்த ஆர்வம் விவரிக்க முடியாத விந்தையாகும். உணவு வேளையில் கூட மற்றவர்களோடு தமிழில் உரையாடுவாராம். சந்தைவெளிகளில் தமிழில் அருளுரைகள் ஆற்றிவிட்டு, தம்பேச்சுத்தமிழில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டும்படி மக்களைக் கேட்பாராம். இடையில் தம் திருப்பணி தொடர்பாகத் தாய்நாட்டுக்கும் இங்கிலாந்துக்கும் செல்ல வேண்டி வந்தபோது, தமிழ்மறவாதிருப்பதற்காக ஆசிரியர் அழகப்பனை உடன் அழைத்துச் சென்றார். அவர் தமிழில் தாம் பெற்ற புலமைபற்றி இப்படி எழுகிறார். *"எந்தெந்த தமிழ்நூல்கள் என் சொல்லையும், உச்சரிப்பையும் தமிழ்மயமாக்குமோ அவைகளையே நான் மூன்று ஆண்டுகளாய்ப் படித்தேன். நான் தமிழ் நூல்களைப் படிக்க ஆரம்பித்ததிலிருந்து ஜெர்மனி, இலத்தீன் மொழியில் எழுதப்பட்ட நூல்களைப் படிப்பதை நிறுத்தினேன். தமிழரோடு சேர்ந்து தமிழ் நூல்களையே படித்தேன். இதனால் தமிழ் மொழியைத் தாய்மொழி போல் என்னால் பேசவும் பல நூல்களைத் தமிழில் எழுதவும் முடிந்தது".*

**சீகன்பால்குவின் தமிழ்ப்பணி - வகைப்பாடுகள்**

இத்தகு தமிழ்ப்புலமைபெற்ற சீகன்பால்கு, தம் சமயப்பணியோடு சேர்ந்து ஆற்றிய தமிழ்ப் பணிகள் பலதிறத்தன. அவற்றைக் 'கிறித்தவர்களின் இலக்கணப் பணி' பற்றி நூலெழுதிய மொழியியல் அறிஞர் செ.வை. சண்முகம் பின்வருமாறு வகைப்படுத்துகிறார்.

1. தமிழ்நாட்டுச் சக சமயத்தவர்களுக்கு

   அ. பைபிள் தமிழ் மொழிபெயர்ப்பு (பிறமொழி-தமிழ்)

   ஆ. பக்திப்பாடல் மொழிபெயர்ப்பு (ஜெர்மன் - தமிழ்)

*2. சக ஊழியர்களுக்கு - தமிழ் இலக்கணம், அகராதி*
*3. தாய்நாட்டு மக்களுக்கு*
*அ. தமிழர் சமயம் பற்றிய ஜெர்மன் நூல்கள்.*
*ஆ. தமிழ் - ஜெர்மன் மொழிபெயர்ப்பு*

*இது பொருத்தமுடையதொரு பாகுபாடே எனினும், இன்னும் எளிமையாகவும், தெளிவாகவும் பொது நிலையிலும், அவரது பணிகளை வேறு மூன்று பாகுபாடுகட்கு உட்படுத்தலாம்.*

*அதாவது*

1. *தமிழின் பெருமையைப் பிற நாட்டவர்க்குணர்த்த ஆற்றிய பணிகள்.*
2. *கிறித்தவத்தின் பெருமையைத் தமிழ்நாட்டவர்க்குணர்த்த ஆற்றிய பணிகள்.*
3. *தமிழின் மாண்பை அனைவரும் அறியவும் ஆயவும் புரிந்த பணிகள். இவை ஒவ்வொன்று பற்றியும் சற்று விரிவாகக் காண முற்படுவோம்*

***I தமிழின் பெருமையைப் பிறநாட்டார் அறிய ஆற்றிய பணிகள்***

*இவ்வகையில் சீகன்பால்கு அடிகளார் ஆற்றிய பணிகள் பலவாகும். தமிழ் இலக்கியங்களின் மாண்பையும் தமிழ்ப்பண்பாட்டின் உயர்வையும் பிறநாட்டார் உணரும்படியாக. வெளிநாடுகளுக்குப் பல்வேறு சிறுமடல்களை எழுதி அனுப்பினார். மேலும் நீதிவெண்பா, கொன்றைவேந்தன், உலகநீதி முதலிய அறஇலக்கியங்களை ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த்தார். மேலும் தமிழ் பயில விழையும் வெளிநாட்டு இறைப்பணியாளர்க்கும் பிறருக்கும் உறுதுணையாக விளங்கும் வகையில் அரும்பாடுபட்டு, இருவகை அகராதிகளை உருவாக்கினார். ஒன்று 40,000 சொற்கள் கொண்ட தமிழ்-ஜெர்மன் அகராதி.*

*இது உரைநடைக்கானது. அடுத்து, 17,000 சொற்கள் கொண்ட (செய்யுள்களில் பயன்படுத்தப்படுவன) ஒரு தமிழ் - ஜெர்மன் அகராதியையும் தயாரித்தார். இன்னும் தமிழ் - ஜெர்மன் இலக்கணநூல் ஒன்றும் தயாரித்தார். தமிழ் - இலத்தீன் மொழி இலக்கணநூலும் தயாரித்ததாகத் தெரிகிறது. தாம் பிற நாட்டவருக்கு எழுதிய கடிதங்களில் தமிழர்களது தெய்வங்கள், உணவுப்பழக்கங்கள், மருத்துவமுறைகள் பற்றி விரிவாக விளக்கி எழுதியுள்ளார். (இவரது அனைத்துப்பணிகள் பற்றி, பின்னர் தனிப்பட்டியலாகப் பார்ப்போம்.*

***II கிறித்தவத்தின் பெருமையைத் தமிழ்நாட்டார் அறியச் செய்தபணிகள்***

*இவ்வகையிலும் அவர் முக்கியமான பணிகளை ஆற்றியுள்ளார். முக்கியமாக, விவிலியத் திருமறையைத் தமிழில் மொழிபெயர்க்க அவர் மேற்கொண்ட முயற்சிகள் அரியன. பெரியன. சீர்திருத்தத் திருச்சபையில் அவர்தான் முதலாவது திருமறைத் தமிழ்மொழிபெயர்ப்பாளராக விளங்குகிறார். அவர் பல மாதங்கள்*

*முயன்று, தாமறிந்த அக்காலத்தமிழில் விவிலியத்தின் புதிய ஏற்பாடு முழுவதையும் மொழிபெயர்த்து முடித்தார்.*

*பிறகு பழைய ஏற்பாட்டு நூலகளில் ரூத் புத்தகம் வரைதான் அவரால் மொழிபெயர்க்க முடிந்தது. அதற்குள் அவரது திருப்பணிப்பயணம் இம்மண்ணுலகில் முடிவுக்கு வந்துவிட்டது. மேலும், தமிழ்நாட்டவர்களும் தமிழில் கிறித்துபெருமானைப் பாடி வழிபட, சுமார் 48 பக்திப்பாடல்களைத் தாமே சுயமாகத் தமிழில் மொழிபெயர்த்து, மக்கள் பாடவைத்தார்.*

***III தமிழின் பெருமையை அனைவரும் அறிய ஆற்றிய பணிகள்***

*தாம் ஒரு சமயத்தொண்டரே எனினும், தாம் பணியாற்றவந்த நாட்டில் பேசப்படும் மொழியின் உயர்வையும் உன்னதத்தையும் அறிந்த காரணத்தால், அவ்வுயர்தனிச் செம்மொழியின் பெருமையை உலக மக்களெல்லாம் அறிந்திடவேண்டும் என்ற ஆதங்கத்தோடு பலமுயற்சிகள் மேற்கொண்டார்.*

*அவ்வகையில் தான், முன்னரே சுட்டியபடி, பல நாட்டவருக்கும் தாம் எழுதிய மடல்களில் தமிழர் பண்பாட்டின் பலகூறுகளையும் (தெய்வவணக்கம், உணவுமுறைகள், மருத்துவமுறைகள் முதலியன) அவற்றின் உயர்வையும் எழுதிப்பரப்பினார். தமிழ்நூல்கள் பலவற்றை மொழிபெயர்த்து பிறமொழிகளில் கற்கச்செய்தார். ஆய்வடங்கல்கள், நூற்களஞ்சியம் போன்றவை உருவாக்கும் போக்கு இல்லாத 18 ஆம் நூற்றாண்டின் ஆரம்பக்கட்டத்திலேயே, அவர்புரட்சிகரமான பணிகள் செய்தார்.*

*1708 இல் தாம் படித்த தமிழ்நூல்களின் அட்டவணை ஒன்றைத் தயாரித்து, தம் தாய்நாட்டுக்கு அனுப்பினார். மொத்தம் 161 நூல்கள் பற்றிய குறிப்பு இதில் உள்ளதாகத்தெரிகிறது. நான்கு பெரும் பிரிவுகளாக உள்ள இதன் முதல் பிரிவில், அவரே எழுதிய 119 நூல்கள் உள்ளன. இது தமிழ் இலக்கிய வரலாறு எழுத உதவும் நூல் என லெஹ்மன் என்ற அறிஞர் குறிப்பிடுகிறார்.*

***சீகன்பால்கு அடிகளாரின் பன்முகப்பணிகளின் பட்டியல்***

*இவ்வாறாக குறுகியதம் வாழ்நாட்காலத்தில் சீகன்பால்கு அடிகளார் செய்த பணிகள் எழுத எழுத விரிந்து கொண்டே செல்லும் வகையில், பெருகிய பணிகளாக இருந்தலால், கட்டுரையின் அளவு கருதி, அவற்றைச் சுருக்கமாகப் பட்டியலிட்டுக் காண்போம்.*

***1) எழுதிய நூல்கள்***

*அடிகளார் எழுதிய நூல்கள் பல நமக்கு இங்கு கிடைக்கவில்லை. ஜெர்மன்நாட்டு ஹல்லே பல்கலைக்கழக நூலகத்தில் சிலவற்றைக்கண்டெடுத்து டேனியல்*

*ஜெயராஜ் போன்ற ஆய்வாளர்கள் வெளியிட்டுள்ளனர். அவர் தமது நண்பருக்கு எழுதிய கடிதம் மூலம் பின்வரும் 14 நூல்கள் பற்றிய விவரம் தெரிகிறது.*

1. *ஒரு கிறிஸ்தவனுக்கும், தமிழனுக்குமிடையே நடந்த உரையாடல்.*
2. *லுத்தரின் சிறிய வினா - விடை திருமறைப் பயிற்சி நூல்.*
3. *திருமுழுக்குப் பெறுவோர்க்குத் திருமுழுக்கு விவரங்கள் பற்றிய பரீட்சை.*
4. *திருவிருந்து அழைப்பு*
5. *திருச்சபையில் பாடப்பட்ட வேண்டிய பாடல்கள்.*
6. *சில பாவமன்னிப்பு விருத்தங்கள்*
7. *முழு கிறிஸ்தவச் சத்தியங்களும் அடங்கிய 26 பிரசங்கங்கள்*
8. *கிறிஸ்துவின் வரலாறு அடங்கிய 14 ஞாயிறு பிரசங்கங்கள்*
9. *சிறிய பள்ளி நூல் ஒன்று*
10. *தமிழ், போர்த்துக்கீசிய மொழிகளில் சில சுற்றுக் கடிதங்கள்*
11. *அறநெறி இறையியல்*
12. *குருவிற்கும், சீடனுக்குமிடையே கிறிஸ்தவக் கொள்கைகளைக் குறித்த கேள்வி - பதில் அமைப்பிலுள்ள 16 உரையாடல்கள்.*
13. *தமிழ் அகராதி - 20,000 சொற்களுடன்*
14. *தமிழ் செய்யுள் அகராதி - தமிழ்ச் செய்யுள் நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட 17,000 சொற்களடங்கியது.*

**மேலும் ஹல்லே நூல்நிலையத்தில் கிடைக்கும் நூல்கள் :**

1. *Bibilothecal Malabarica*
2. *Geneology of the Malabari Gods (ஜெர்மனி மொழி நூல்)*
3. *Malabarian Religion*
4. *நீதி வெண்பா, கொன்றைவேந்தன் ஆகிய தொகுதிகளிலிருந்து எடுத்தவை சில தொகுப்புகள்*
5. *Tamil German Dictonary*
6. *Translation into Tamil of the New Testament.*
7. *Malabar Words and Pharases.*

***அகராதிகள் - இருவித அகராதிகள்:***

***i) உரைநடை அகராதி***

*தமிழின் கடின சொற்கள் சமய நூல்களிலிருந்து எடுத்தன. முதலில் 20,000 சொற்கள் கொண்டது. ஏழுபாகங்கள். தமிழ் - ஜெர்மன் - லத்தீன் மொழியில் பனை ஓலையில் தொகுக்கப்பட்டது. பின்னர் 40,000 சொற்களாக விரிந்தது. பின்னால் தாள்களிலும் எழுதப்பட்டது.*

***ii) செய்யுள் அகராதி***

*தமிழ்ச் செய்யுள் நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட 17,000 சொற்களைக் கொண்டமைக்கப்பட்டது. தமிழில் சமய உண்மைகளை உரையாடப் பெரிதும் உதவுவது.*

***3. இலக்கண நூல்***

*தமிழ் ஜெர்மன் இலக்கண நூலும் தமிழ் - லத்தீன் இலக்கண நூலும் எழுதியதாகத் தெரிகிறது.*




***4. அச்சகம்***

*தமிழ்நாட்டின் முதல் அச்சகமே தரங்கம்பாடியில் சீசன்பால்குவால் தொடங்கப்பட்டதுதான். ஓலைச்சுவடிகளிலிருந்து தாளுக்கு மாறிய விந்தை இதனால் விளைந்தது. தமிழோடு போர்த்துக்கீசியம், இந்துஸ்தானி, தெலுங்கு மொழிநூல்களும் அச்சிடப்பட்டன. 'காகிதப்பட்டறை' என அப்பகுதி இன்றும் அழைக்கப்படுகிறது.*

***5. கடிதங்கள், நூல்கள்***

*அவர் வெளிநாட்டவருக்கு தமிழ்ப்பண்பாடுபற்றி எழுதிய கடிதங்கள் பற்றியும் நூல்கள் பற்றியும் முன்னரே விளக்கப்பட்டது. குறிப்பாக, தமிழ்நாட்டு*

மருத்துவச்சுவடிகளிலிருந்து பலதகவல்களைச் சேகரித்து, 'வகுட சாஸ்திரம்' என்ற நூலுக்குக் குறிப்புரைகள் எழுதினார். அதையெல்லாம் வெளிநாட்டு மருத்துவ நிபுணர்கள் தமிழகம் வந்து ஆய்ந்து, பெற்றுச்சென்றனர்.

***6. பயிற்சிப்பள்ளிகள்***

*மேலும், அக்காலத்திலேயே பெண்கள் முன்னேற்றத்துக்காகப் பாடசாலைகளும், இறையியல் கல்விச்சாலைகளும் ஏற்படுத்தினார். இன்னும் அனாதை இல்லங்கள், துறவியர் இல்லம் போன்றவையும் ஏற்படுத்தியதற்கு ஆதாரங்கள் உள்ளன.*

***7. மொழிபெயர்ப்பு***

*தமிழிலிருந்து ஜெர்மன் மொழிக்கும், ஜெர்மன் மொழியிலிருந்து தமிழுக்கும் பலநூல்களை மொழிபெயர்த்துள்ளார். லூத்தரின் சிறிய ஞான உபதேசம் போன்ற நூல்களை ஜெர்மனியிலிருந்து தமிழுக்கும், உலக நீதி, கொன்றை வேந்தன் போன்ற நூல்களைத் தமிழிலிருந்து ஜெர்மன் மொழியிலும் பெயர்த்தார் பல கிறிஸ்தவ பக்திப்பாடல்களைத் தமிழில் பெயர்த்தார்.*

***8. ஆலயங்கள் கட்டியமை***

*அடிப்படையில் இறைப்பணியாளரான சீகன்பால்கு அடிகளாரின் போதனையால், கிறித்தவம் தழுவிய மக்கள் வழிபட முதலில் ஓர் ஆலயத்தையும், பின்னர் அதை விரிவுபடுத்தி, இன்னொரு ஆலயத்தையும் 'புது எருசலேம்' என்ற பெயரில் கட்டினார். அதில் தாமே தமிழில் அருளுரையாற்றியதோடு, தமிழ்மக்கள் தம் தாய்மொழியில் இறைவனைப் போற்றிப்பாடவும் வழிபட்டு மகிழவும் வழிவகுத்தார்.*

***அடிகளாரின் மறைவு - பணி நிறைவு***

*குறைவான வாழ்நாட்காலத்தில், நிறைவான சாதனைகளை நம் தமிழ்மண்ணில் விளைத்துக்காட்டிய அவ்வித்தகரை, இறையுணர்வின் இமயமான 'அடிகளார்' என அழைத்தலே பொருந்தும். 24 வயது இளைஞனாகத் தமிழ் மண்ணில் கால்பதித்தவர், 36வயதில் 1719 பிப்ரவரி 23 ஆம்நாள், இத்தமிழ் மண்ணிலேயே தம் இறுதி மூச்சைவிட்டு, தரங்கம்பாடியிலேயே அழியாத புகழுரு தாங்கி அடக்கமாகியுள்ளார். அப்பெருமகனின் வாழ்வும் பணிகளும், சமயப்பணியோ சமுதாயப்பணியோ தமிழ்ப்பணியோ எவ்வகை நற்பணி ஆற்ற விழைவார்க்கும் அறைகூவல்தரும் அற்புதமான முன்மாதிரிகளாகும்.*

# சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**


| | **நூல்கள்** | **விலை (Rs.)** |
|---|---|---|
| *1.* | *திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்)* | *200* |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *உன்னோடு உரையாடுதல்* | *100* |
| *2.* | *காதல் மொழி* | *200* |
| *3.* | *பார்வையில் பூத்த நிலா* | *100* |
| *4.* | *தேனடையும் வரலாறு* | *100* |
| *5.* | *நுண்கலை மருத்துவன்* | *200* |
| *6.* | *தொடரும் புழுதிக்கால்கள்* | *100* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *2.* | *எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம்* | *200* |
| *3.* | *சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்)* | *200* |
| *4.* | *வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட* | *200* |
| *5.* | *மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *6.* | *எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி* | *200* |
| *7.* | *எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி* | *200* |
| *8.* | *ஒளி விளக்கு எம்.ஜி.ஆர்.* | *200* |
| *9.* | *வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I* | *200* |
| *10.* | *நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I]* | *200* |
| *11.* | *பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II]* | *200* |
| *12.* | *இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *13.* | *முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன்* | *200* |
| *14.* | *இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *15.* | *எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு* | *200* |
| *16.* | *படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு* | *200* |
| *17.* | Unique Fandom of MGR | *200* |
| *18.* | *எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம்* | *200* |

19. எம்ஜிஆர் படத்தில் சண்டைக் காட்சிகளின் சுவாரஸ்யங்கள் –I 200
20. எங்க வீட்டுப்பிள்ளை 200
21. எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும் 200

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

1. தலைமை பொறுப்பேற்கலாம் 120
2. இணையத் தமிழ் 150
3. ஊடகச் சட்டங்கள் 250
4. ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ் 200
5. கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்) 200
6. மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்) 200

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

1. பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு 200
2. பெண் தெய்வ வழிபாடு 200
3. தேவேந்திரன் 200
4. மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை) 200
5. இரு நிலத்தில் திருமுருகன் 200
6. முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்) 200
7. வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும் 200
8. யானைக்கடவுள் 200
9. பெண் பூப்பின் புனித வழிபாடு 200

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

1. பாடுபொருளும் பாசப்பொருளும் 250
2. "பூ மர நிழலி"ன் களமும் காலமும் 200
3. "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு 100
4. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் **கவிதையில் காதல்** 100
5. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள் 200

**ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு**
**முனைவர் செ. இராஜேஸ்வரி**

1. எட்டுத்திக் கும் செல்வீர் 200
2. அவன் கடவுளுக்கு நிகரானவன் 200
3. செக்கச் சிவந்த ரோஜா 200
4. கலீல் ஜிப்ரா னின் "மணலும் நுரையும்" 200
5. கலீல் ஜிப்ரானின் "பாடல்கள் 14" 200

**Tamil Classics in English – (Dr. C. Rajeswari)**

1. Kurunthokai 200
2. Agananooru 200
3. Purananooru 200
4. Naaladiyaar 200

